# வைதிக தர்ம வர்த்தனி




ஆசிரியர் :

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

மலர் 13
இதழ் 2

விகாரி௵
கார்த்திகைமீ

# நன்றியுடன் வணக்கம்!

பதிமூன்ரும் ஆண்டு முதல் மலரை ச்லாகித்துப் பலர் சிறந்த கருத்துகளை எழுதினதுடன் நன்கொடை அளித்து ஆசீர்வதித்தும் இருக்கிருர்கள். அவைகளை வெளியிடுவதாஞல் தற்புகழ்ச்சி யாகும். எல்லோருக்கும் நன்றியுடன் வணக்கம். இன்னும் நன்ருக நடத்த உங்கள் அன்பும் ஆதரவும் தேவை! ஆசிரியர்.

* இதுவரை 13-ம் ஆண்டிற்காக சந்தாத்துகையை அனுப்பாத வர்களும், கடிதம் எழுதியவர்களும் தயவுசெய்து தங்கள் சந்தாவை முன்னதாக அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கிருேம்.

* சந்தா அனுப்பும்போது தங்கள் சந்தா நம்பரையும், விலாசத் தையும் தெளிவாக எழுதுங்கள். புதிதாகயிருந்தால் புதிய சந்தாதாரர் என்று எழுதுங்கள்.

* ஏஜெண்டுகள் இல்லாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. விபரத்திற்கு எழுதவும்.

---

# ஜோதிடம்:

குறிப்பான கேள்விகளுக்கு தெளிவான பதில். ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை. நான்கு கேள்விகளுக்கு ரூ. 3 முன்பணம்.

விபரங்களுக்கு :- **காயத்ரி நிலேயம்,**

15, மங்கேஷ் தெரு, தபால் பெட்டி நெ. 1428, மதருஸ்—17.

---

## தர்ம சாஸ்த்ரச் சுருக்கம்.

*கீழவிடையல் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர் 1917-ம் வருஷத்தில் இயற்றியதின்* **நான்காம் பதிப்பு.**

*ப்ராஹ்மணர்களின் கர்மானுஷ்டானங்களை விவரிக் கும்* **வைத்யநாத தீக்ஷிதீயம்** *என்ற தர்ம சாஸ்த்ரத்தின் ஆறு காண்டங்களையும் ஸங்க்ரஹமாய் தமிழில் வெளி யிடப்பட்டது.* **விலே ரூ. 3-00,** *முன்பணம் ரூ. 3-82*
*வி. பி. யில் ரூ. 4-00*

**கிடைக்குமிடங்கள் :** **கே. எம். நாகராஜ அய்யர்,**
*கீழவிடையல், கருப்பூர்-குடவாசல்* **P. O.** *(தஞ்சைஜில்லா)*
**கிரி டிரேடிங் ஏஜன்ஸி,** Religious Book Sellers & Publishers (Near Mathunga Ry. Station,) Bombay-19.
**S. V. V. தீக்ஷிதர்,** 25. C, *வடக்கு மாடவீதி, மைலாப்பூர்.*
**P. B. பஞ்சாக்ஷரகுருக்கள்,** 23/1, *அய்யஞர் கோயில்ரோடு,* Vannar Ponnai, Jafna, CEYLON.

# விகாரிஞு கார்த்திகைமீ சரத்ருது. தக்ஷிணயனம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1959ஞு நவம்பர் மீ 16 | திங். | ப்ர. | 28-37 | க்ருத். | 18-00 | ம.அ. | — |
| 2 | 17 | செவ். | த்வி. | 34-55 | ரோ. | 25-23 | அ.சி. | த்வி. |
| 3 | 18 | புதன் | த்ரி. | 41-12 | மிருக. | 32-47 | சி. | த்ரி. |
| 4 | 19 | வியா. | சது. | 47-10 | திரு | 39-55 | ம.அ. | சது. |
| 5 | 20 | வெள். | பஞ். | 52-32 | புன. | 46-32 | சி. | பஞ். |
| 6 | 21 | சனி | ஷஷ். | 56-55 | பூச. | 52-13 | சி. ம. | ஷஷ் |
| 7 | 22 | ஞா. | ஸப். | 59-53 | ஆயி. | 56-35 | சி. ம. | சப். |
| 8 | 23 | திங். | அஷ். | 60-00 | மக. | 59-20 | ம. சி. | அஷ் |
| 9 | 24 | செவ். | ,, | 1-05 | பூர. | 60-00 | சி அ. | நவ. |
| 10 | 25 | புத. | நவ. | 00-25 | ,, | 00-12 | அ.சி. | தச. |
| | | | தச. | 57-45 | உத். | 59-05 | | |
| 11 | 26 | வியா. | ஏகா. | 53-00 | ஹஸ். | 56-00 | சி. | ஏ. |
| 12 | 27 | வெ. | த்வா. | 46-35 | சித். | 51-12 | சி. | த்வா |
| 13 | 28 | சனி | த்ர. | 38-33 | சுவா. | 44-55 | அ.சி. | த்ர. |
| 14 | 29 | ஞா. | சசி. | 29-32 | விசா. | 37-40 | ம. | சசி. |
| 15 | 30 | திங். ● | அமா. | 19-52 | அனு. | 29-50 | சி. | அ.ப். |
| 16 | டிசம்பர் மீ 1 | செவ் | ப்ர. | 10-03 | கேட். | 21-57 | அ. | த்வி. |
| 17 | 2 | புதன் | த்வி. | 00-35 | மூல. | 14-32 | ம.அ. | த்ரி. |
| | | | த்ரி. | 51-57 | | | | |
| 18 | 3 | வியா. | சது. | 44-35 | பூரா | 8-03 | சி. | சது. |
| 19 | 4 | வெள். | பஞ். | 38-52 | உத்தி. | 3-00 | | பஞ். |
| | | | | | சிர. | 59-40 | சி.ம. | |
| 20 | 5 | சனி | ஷஷ். | 35-05 | அவி. | 58-15 | சி.அ. | ஷஷ் |
| 21 | 6 | ஞா. | ஸப். | 33-22 | சத. | 58-57 | சி. | சப். |
| 22 | 7 | திங். | அஷ் | 33-43 | பூரட். | 60-00 | ம. | அஷ் |
| 23 | 8 | செவ். | நவ. | 36-00 | ,, | 1-35 | ம.அ. | நவ. |
| 24 | 9 | புதன் | தசமி | 39-50 | உத்தி. | 5-53 | சி. | தச. |
| 25 | 10 | வியா | ஏகா. | 44-55 | ரேவ. | 11-35 | சி.அ. | ஏகா. |
| 26 | 11 | வெள். | த்வா. | 50-45 | அசு. | 18-10 | அ.சி. | த்வா. |
| 27 | 12 | சனி | த்ர | 57-00 | பர. | 25-20 | சி.அ. | த்ர. |
| 28 | 13 | ஞா. | சசி. | 60-00 | க்ருத். | 32-45 | சி. | சசி. |
| 29 | 14 | திங். ○ | ,, | 3-20 | ரோ. | 40-08 | அ. | பௌ |
| 30 | 15 | செவ். | பௌ. | 9-40 | மிருக. | 47-22 | சி. ம. | ப்ர. |

11, 25உ ஏகா. 13, 27உ ப்ரதோஷம். 15உ அமாவாசை.
27உ கிருத்திகை வ்ரதம். அண்ணாமலைதீபம். 29உ ஸர்வாலயதீபம்.

---

**ஸ்வர்க்க ஸுகத்தை விரும்பாதவர் யார்?**

# வைதிக தர்ம வர்த்தனீ

यतो धर्मः ततः कृष्णः यतः कृष्णः ततो जयः

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | விகாரி௵ கார்த்திகை௴ | இதழ் 2




## பொருள் அடக்கம்.




வருஷ சந்தா ரூ. 5,
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம்:
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# நமது உபன்யாஸ மங்களம்.

1907ஆு மைலாபூர் ஸம்ஸ்கிருத காலேஜில் பிரும்மஸ்ரீ சந்த்ரசேகர சாஸ்திரிகள் பிரும்ம ஸூத்ர பாஷ்ய பாடம் ஆரம்பித்த போது பரமாசார்யாள் ஞானமார்க்கத்தின் பொருட்டு அந்தந்த அதிகாரிகளுக் கேற்றபடி எண்ணிறந்த நூல்களை இயற்றி லோகோபகாரம் செய்தது எம் மனதைக் கவர்ந்தது. கல்விகற்றவர் மற்றவர்களுக்கு அறிவூட்டும் வகையில் தொண்டு புரியவேண்டும் என ஸ்ரீ காமகோடி பீடாதிபதி அவர்கள் அடிக்கடி கூறிவந்தது மனதில் ஓர் உணர்ச்சியை உண்டுபண்ணிற்று. முதன் முதலில் பதினைந்தாம் ப்ராயத்தில் மண்ட குளத்தூரில் ஸ்ரீ சங்கர ஜயந்தி காலத்தில் முதல் உபன்யாஸத்தைத் துவக்கினேன். அபிநவ வ்யாஸ ச்வேதாரண்யம் யஜ்வா அவர்களும், மஹோபன்யாஸி வெங்கந்தூர் சாஸ்திரிகளும், திவான்பகதூர் K. S. இராமஸ்வாமி சாஸ்திரிகளும் என்னுடன் உபன்யாஸகர்களாவார்கள்.

வெங்கந்தூர் மஹோபன்யாஸி (எனது ஜனக பிதாவும் குருவும்) தலைமைவகித்து என் உபன்யாஸத்தைப்பற்றி ஸபையில் ஒன்றும் கூருமல் விட்டுவிட்டு தனியே அழைத்து உனக்கு ஸங்கீதம் தெரியாதது பெரும் குறை. ஒரே உபந்யாஸத்தில் எண்ணிறந்த விஷயங்களைக் கூருதே என இரண்டு சொற்களைச் சொன்னுர். அன்றுமுதல் இன்றளவும் ஒவ்வொரு நாளும் தினம் சூன்யமின்றி தேசியவிஷயமும், மத விஷயமும் உபன்யாஸம் நடைபெறும். சில நாட்களில் இரண்டும் மூன்றும் நடைபெறும். யாத்திரைக்குச் சென்றவிடங்களிலும் அங்கும் உபன்யஸிக்கச் சொல்வார்கள். ப்ரபவாஆண்டுமுதல் விகாரி ஆண்டு புரட்டாசி முடிய சென்னையிலுள்ள "ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மடத்தில்" ப்ரதிதினம் மாலையில் பதினெண் மஹாபுராணங்களையும், சில உபபுராணங்களையும், ராமாயண, பாரத, ஹரிவம்ச, "கர்க ஸம்ஹிதை" முதலிய இதிஹாஸங்களையும் இடைவிடாமல் கூறிவந்தேன்.

ஒருவரிடமும் நான் உபன்யாஸம்செய்கிறேன் என்று சொல்லாதே! எவரேனும் உபன்யாஸம் செய் என்ருல் மறுக்காதே! என்று ஜகத்குரு கூறிய பொன்மொழியைக் கடை பிடித்து வந்து, ஸ்ரீ பரமாசாரியாள் சொற்படி பதினெண் புராணங்களையும், மற்றும் சுமார் 70 நூல்களையும் எழுதி வெளியிட்டேன். வயது முதிர்ந்தது. உடல் தளர்ந்தது. ஊக்கம் குறைந்தது. ஷெ மடத்தில் ஸ்ரீ ராமநவமியில் ஆரம்பித்த ஸ்ரீமத் ராமாயண உபன்யாஸத்தை புரட்டாசிமீ கடைசிவாரத்துடன் பூர்த்தி செய்து ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்துடன் ஸ்ரீ மடத்தில் நடந்து வந்த எனது நித்திய உபன்யாஸத்தையும் பூர்த்திசெய்தேன்.

ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய பாதுகாப்யாம் நம:

ஆசிரியர்.

---

**ஸ்வர்க்கம் சென்று வந்தவருக்கு அடையாளம் 4.**

# கார்த்திகை மாஸ விசேஷம்.

க்ருத்திகா நக்ஷத்ரம் பௌர்ணமியில் வருவதால் கார்த்திகை எனப் பெயர் உண்டானது.

**7உ திங்கள்கிழமை காலபைரவாஷ்டமி.** சிவாவதாரமான பைரவரை இரவில் நாலுயாமமும்பூஜிக்கவேண்டும். பகலில்உபவாஸம். இரவில் பூஜை. மறுநாள் பாரணே. காசியில் பாபம் செய்வோருக்கு பைரவரே சிக்ஷை தருபவர். அவரது அவதார தினமான அன்று பூஜை செய்தால் நரகபயமிராது. பைரவ நாமா 108 ஜபித்தால் கக்குவா னகலும்.

**14உ திருவசநல்லூரில் ஐயாவாளுக்காக கங்கை அவதரித்த நாள்.** கார்த்திகை பானுவாரமெல்லாம் மஹா புண்யகாலம். ஸ்ரீவாஞ்சியம், விரிஞ்சிபுரம், திருநாகேச்வரம், குற்ருலம் முதலிய க்ஷேத்ரங்களில் பாநுவார தடாக ஸ்நானம் மிக புண்யமளிப்பதாம்.

**25உ கைசிகீ ஏகாதசி:** மிக புண்யகரமானது. (25 ஏகாதசி நூலிலிதை விரிவாகக் காணலாம். 45 ந. பை. ஸ்டாம்பு அனுப்பி ருருகுலத்தில் பெறலாம்)

**28உ தத்தாத்ரேய அவதார தினம்.** கார்த்திகை திருபுர ஸம்ஹாரம். பகவான் ஜோதிர் லிங்கமாக அவதரித்தது. மஹாபலிக்கு நற்கதி தந்த தினம்.

---

## நூல் அறிமுகம்.

**ஸ்ரீ சங்கர கிருபா:** மாதாந்தர தமிழ் பத்ரிகை. ஆசிரியர், ஸ்ரீ K. R. வெங்கட்ராமன், 3, வரதராஜபெருமாள்கோவில்தெரு, கொத்தவால் சாவடி, திருச்சி-3. பரந்த நோக்கத்துடன் சிறந்த விஷயங்கள். பக்தி, ஞானம் முதலியவை அடங்கியது.

**ஸ்ரீ காமாக்ஷி ஸுப்ரபாதம்:** ஸ்ரீ லக்ஷ்மீகாந்த சர்மா இயற்றியது. ஸம்ஸ்கிருத ச்லோகமும் அர்த்தமும் உள்ளது. அருமையான ஸாஹித்யம். ஜகத்குரு, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ மடத்திற்கு எழுதிப் பெறலாம். விலை 50 ந.பை. தபால் சார்ஜ் வேறு.

மாம்பலம் குருகுல வெளியீடுகள்:

**1. ஸ்ரீ விநாயக புராணம்:** (நமது பத்ரிகையில் வந்தது) விலை ரூ 2—50. ரிஜிஸ்தரானுல் 87 நயா பைசாவும், புக்போஸ்டானுல் 25 நயா பைசாவும் கூட அனுப்பவேண்டும். ரிஜிஸ்தரில் பெறுவது தான் நலம்.

**2. ஸாம, ருக்வேத ஸந்த்யாவந்தனம்:** (நமது பத்ரிகையில் வந்தது). நாகரம்—தமிழ் எழுத்திலுள்ளது. விலை 75 நயா பைசா. ரிஜிஸ்தரானுல் 64 ந. பைசாவும், புக்போஸ்டானுல் 10 ந. பைசாவும் கூட அனுப்பவேண்டும்.

**3. சிவராத்ரி கதையும், பூஜையும்:** சிவராத்ரி மஹிமையை விளக்குவது. விலை 25 நயா பைசா. தபால் சார்ஜ் புக்போஸ்டிற்கு 8 ந. பைசா தனி.

**4. 18 புராணம் முதல் பாகம்:** (ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம் அடங்கியது) விலை ரூ. 1. ரிஜிஸ்தரானுல் 75 ந. பைசாவும் புக்போஸ்டானுல் 25 ந. பைசாவும் கூட அனுப்ப வேண்டும்.

---

*ஸ்வர்க்கம் போகின்றவர்க்கும் அதே சின்னம் 4.*

# கணேச ஹோமம்.

(ஐப்பசிமீ தொடர்ச்சி)

[மூலமந்த்ரம் குருமுகமாக உபதேசம் பெறுக.]

த்யாநம் செய்து மூலமந்த்ர ஜபம் ஆனபின்

**गणानांत्वा गणपति्ँहवामहे कविं कवीनामुपम श्रवस्तमम् । ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आनश्श्रृण्वन्नूतिभिः सीदसादनम् ॥ अस्मिन्नग्नौ महागणपति ध्यायामि मावाहयामि ॥**

க³ணாநாம்த்வா கணபதிகும் ஹவாமஹே கவிம்கவீனா முபம ஶ்ரவஸ்தமம் । ஜ்யேஷ்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத ஆனஶ்ஶ்ருண்வன்னூதிபி: ஸீதஸாதனம் ॥ அஸ்மின் அக்னௌ மஹாகணபதிம் த்யாயாமி ஆவாஹயாமி ॥

ஆஸனம் ஸமர்ப்பயாமி, பாத்யம் ஸமர்ப்பயாமி, அர்க்யம் ஸமர்ப்பயாமி, ஆசமநீயம் ஸமர்ப்பயாமி. ஸ்நாபயாமி கந்தாந்தாரயாமி, அக்ஷதான் ஸமர்ப்பயாமி புஷ்பாணி ஸமர்ப்பயாமி தூபம் ஆக்ராபயாமி தீபம் தர்ஶயாமி என்றவரை செய்து நைவேத்ய ஸ்தானத்தில் ஹோமம் செய்யவேண்டும்.

அக்னி ப்ரதிஷ்டை ஆனபின் அக்னி ஸந்தானத்திற்குச் செய்வதுபோல் கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் தர்ப்பங்களால் பரிஸ்தரணம் அமைத்து, அக்னிக்கு வடபுறத்தில் கிழக்கு நுனியாக தர்ப்பம் அமைத்து அதில் தர்வீ, ஆஜ்யஸ்தாலீ. இதர தர்வீ, ப்ரோக்ஷணீ பாத்ரம் எனும் நான்கு பாத்ரங்களை இரண்டு இரண்டாகக் கவிழ்த்துவைத்து, இரு தர்ப்பங்களால் நுனி ஸமமாய் இருக்கும்படிச்செய்த ப்ராதேசமாத்ரம் நீளமுள்ள பவித்ரத்தால் அவைகளைத் தொட்டு ப்ரோக்ஷணீ பாத்ரத்தை எடுத்து நமக்கும் அக்னிக்கும் இடையில் பரிஸ்தரணத்திற்கு மேற்கே வடக்கு நுனியாக அமைக்கப்பட்ட தர்ப்பத்தில் வைத்து பாத்ரத்தில் அக்ஷதையுடன் தீர்த்தத்தை விட்டு வடக்கு நுனியாக இரு கைகளால் பிடித்து கிழக்கு முகமாக மூன்றுமுறை குழவியால் அறைப்பதுபோல் ஜலத்தைத் தள்ளி கவிழ்த்துள்ள பாத்ரங்களை நிமிர்த்தி மூன்று முறை எல்லா ஜலத்தாலும் ப்ரோக்ஷித்து ப்ரோக்ஷணீ பாத்ரத்தைத் தென்புறத்தில் வைக்கவேண்டும். நெய்யை அக்னியில் காய்ச்சி பவித்ரத்துடன் உள்ள ஆஜ்ய பாத்ரத்தில் ஆஜ்யத்தைவிட்டு அக்னிக்குவடபுறகோடியில்

---

விறட்டியில் தணல்களை எடுத்து வைத்து அதன்மீது ஆஜ்ய பாத்ரத்தை வைத்து ஒரு தர்ப்பத்லதைக் கொளுத்தி அந்த ஆஜ்யத்தின்மீது காட்டி அந்த தர்ப்பத்தை வடக்கே எறியவேண்டும். ஒரு அங்குல நீளத்தில் இரண்டு தர்ப்பத்தை நுனிகளைக் கிள்ளி (நகத்தால் கிள்ளக்கூடாது) ஜலத்தில் நனைத்து அந்த ஆஜ்யத்தில் போடவேண்டும்.

பிறகு ஒரு தர்ப்பத்தைக் கொளுத்தி ஆஜ்ய பாத்ரத்தை ஜ்வாலையுடன் மூன்றுமுறை சுற்றி வடக்கே எறிந்து ஆஜ்ய பாத்ரத்தை வடக்கே இறக்கி (அக்னியை அக்னியில் சேர்த்து) நம் எதிரில் வைத்துக்கொண்டு பவித்ர முடியால் முன்போல் நெய்யைப் போகவர மூன்று முறை அறைத்து (இதற்கு உத்பவநம் என்றுபெயர்) பவித்ரத்தின் முடிச்சை அவிழ்த்து ஜலத்தை விட்டு கிழக்கு நுனியாக அக்னியில் வைக்கவேண்டும். இதுவரை ஆஜ்ய ஸம்ஸ்காரம் என்று பெயர். இது ஸகல ஹோமங்களுக்கும் பொதுவானது. (இதன் உட்கருத்து அடுத்த இதழில் வரும்).

பிறகு தர்வி ஸம்ஸ்காரம் – இரு பலாச இலைகளையும் கையிலெடுத்து அக்னியில்காட்டி தர்ப்பங்களால் துடைத்து மறுபடியும் அக்னியில் காய்ச்சி ப்ரோக்ஷித்து ஆஜ்ய பாத்ரத்திற்கு வடக்கே வைத்து தர்ப்பங்களை ஜலத்தால் தொட்டு அக்னியில் அர்ப்பணம் செய்யவேண்டும். அதன் பிறகு அக்னிக்கு பரிஷேசநம் செய்க.

**अदिदेनुमन्यस्व। अनुमतेऽनुमन्यस्व। सरस्वतेनुमन्यस्व देवसवितः प्रसुवः ॥**

அதிதேனுமன்யஸ்வ - அநுமதேநு மன்யஸ்வ -ஸரஸ்வதேநு மன்யஸ்வ - தேவ ஸவித: ப்ரஸுவ:

இதுவரை அக்னி கார்யத்தில் யாதொரு மந்த்ரமும் இல்லை. எல்லாம் தந்த்ரமே. ஶ்ரௌதாக்னியில் மந்த்ரம் உண்டு.

அக்னியை மங்களாக்ஷதையால் நான்குபுறமும் அலங்கரித்து இதர தர்வியால் நான்குமுறை நெய்யை எடுத்து ப்ரதான தர்வியில் விட்டு (அக்னி ஸித்[4]யர்த்த[2]ம் வ்யாக்ருதி ஹோமம் கரிஷ்யே) எனக் கூறி ओं भूर्भुवस्सुवस्वाहा-ஓம் பூ[4]ர்பு[4]வஸ்ஸுவஸ்வாஹா என்று ஹோமம்செய்து (ப்ரஜாபதய இதம் நமம) என்று கூறவேண்டும்.

---

லோபம் கடினவாக்கு தேவ த்விஜ துவேஷம்!

(அக்நயே ஸ்வாஹா-அக்நய இதம் நமம) வடகிழக்கில் அக்நியில் ஹோமம்செய்து (ஸோமாய ஸ்வாஹா-ஸோமாய இதம் நமம) தென்கிழக்கில் ஹோமம் செய்யவேண்டும். பிறகு (அக்நயே ஸ்வாஹா - அக்நய இதம் நமம) நடுவில் ஹோமம் செய்க.

இதன்பிறகு மூலமந்த்ரத்தால் பதினாறு ஆஜ்யாஹுதி செய்து, மோதகம், அவில், பொரி, மாவு, கரும்புப்புள், தேங்காய் கீறு, எள்ளு, வாழைப்பழம் இந்த த்ரவ்யங்களைக்கொண்டு தனித்தனியாகமூலமந்த்ரத்தைக் கூறி பதினாறு பதினாறு முறை ஹோமம் செய்து, இந்த எட்டு த்ரவ்யங்களையும் சேர்த்து இருபத்தெட்டு அல்லது நூற்றெட்டு ஹோமம் செய்து, அந்த த்ரவ்யத்தாலேயே ஸ்விஷ்டக்ருத் ஹோமம் செய்து பரிஷேசநம் செய்து உபஸ்தானம் செய்யவேண்டும்.

**अदितेऽन्वमꣳस्थाः अनुमतेऽन्वमꣳस्थाः सरस्वतेऽन्वमꣳस्थाः। देवसवितः प्रासावीः ॥**

அதி³தேன்வமக்கு³ஸ்தா: அநுமதேன்வமக்கு³ஸ்தா ஸரஸ்வதேன்வமக்கு³ஸ்தா: தே³வஸவித; ப்ராஸாவீ: இது உத்தர பரிஷேசந மந்த்ரம்.

முன் கூறிய எட்டு த்ரவ்யங்களை ஒன்றுசேர்த்து ஒரு பகுதியை கலசம் அல்லது ஸ்வஸ்தி சக்ரம் அல்லது தீபம் அல்லது விநாயகவிக்ரஹத்திற்கு ஷோடஶ உபசார பூஜை செய்து அதை நிவேதநம் செய்யவேண்டும். கற்பூர ஹார்த்தி செய்து (அக்நி உபஸ்தா²னம் கரிஷ்யே) என ஒரு ஸமித்தை அக்நியில் வைத்து எழுந்து நமஸ்காரம் செய்து, கஜாநநம்த்வா........ஸாதநம் என்று முன்னம் ஆவாஹனத்திற்குக் கூறிய மந்த்ரத்தைச் சொல்லி (அக்நே: பி³ம்ப³ாத் விக்⁴நேஶ்வரம் யதாஸ்தானம் ப்ரதிஷ்டாபயாமி) என அக்ஷதையை அக்நிமீதும் பிம்பத்தின்மீதும் போட்டு உத்வாஸனம் செய்து அந்த பஸ்மாவை இட்டுக்கொண்டு ஆசமனம் செய்து,

**कायेनवाचा मनसेन्द्रियैर्वा बुध्यात्मनावा प्रकृतेः स्वभावात्। करोमि यद्यत् सकलं परस्मै नारायणायेति समर्पयामि ॥**

காயேநவாசா மநஸேந்த்ரியைர்வா பு⁴த்³யாத்மனாவா ப்ரக்ருதே: ஸ்வபாவாத்। கரோமி யத்³யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ॥

---

காமம் கோபம் லோபம் மூன்றும் நரகவாசற்படி.

ஓம் தத் ஸத் ப்ரும்மார்ப்பணமஸ்து. என ஒரு உத்தரணி தீர்த்தத்தை பூமியில் விட்டு ப்ரஸாதத்தை எல்லோருக்கும் அளிக்க வேண்டும். இது ஒரு ஸம்ப்ரதாயம்.

குறிப்பு :— மலையாளத்தில்தான் இது விசேஷமாக நடக்கும். அங்கும் பலர் பலவகையாகச் செய்கின்றனர். இது அதி ஸங்க்ரஹமுமல்ல, அதி விஸ்தாரமுமல்ல, மத்ய நிலையிலுள்ளது. ஷட்பாத்ர விதானமாகச் செய்து ப்ரும்மவரணம் இத்மம் பரிதிப்ரணீதை. உத்தராங்கமாக ஜயாதிகளைச் செய்து பூர்ணாஹுதி. ஒருவழி நித்ய ஹோமத்தில் சதுஷ்பாத்ர ஸாதனம் கூட இல்லாமல் அக்நியிலும் அருகில் தீபம் அல்லது கலசத்தில் விநாயகரை ஆவாஹனம் செய்து மூலமந்த்ரத்தால் பொரி மாத்ரம் அல்லது தேங்காய் மாத்ரம் ஹோமம் செய்வது ஒரு பழக்கம், கொப்பரைக்காயை உரித்து உடைத்து கொப்பரை கொட்டங்கச்சி மேல்மட்டை இவைகளைத் தனித்தனியாக ஹோமம் செய்வது ஒரு ஸம்ப்ரதாயம்.

கண்ணுள்ள கொட்டாங்கச்சியை கபாலம் என்றும் கூறுவர். ஜாதவேதஸே என்ற மந்த்ரத்தைக் கூறியும் மற்றதை த்ருவாஸ—என்ற மந்த்ரம் கூறியும் ஹோமம் செய்வர். சிலர் மூலமந்த்ரமாகக் கொள்வது ஏகாக்ஷரி. சிலர் அஷ்டாக்ஷரி.

**ॐ श्रीं ह्रीं क्लीं ग्लौं गं गणपतये वर वरद सर्वजनं मेवश मानय स्वाहा**

ஓம் ஶ்ரீம் ஹ்ரீம் க்லோம் க்³லௌம் க³ம் க³ணபதயே வர வரத³ ஸர்வஜநம் மேவஶ மானயஸ்வாஹா = என்பது சிலர், கணாநாந்த்வா என்பது சிலர்.

**तत्पुरुषाय विद्महे वक्रतुण्डाय धीमही । तन्नोदन्तिः प्रचोदयात् ॥**

தத்புருஷாய வித்மஹே வக்ர துண்டாய தீ⁴மஹி ।
தந்நோ த³ந்தி: ப்ரசோதயாத் ॥

என்பதை சிலர் ஹோமமந்த்ரமாகக் கொள்கிறார்கள். ஹோமம் ஆனபின் சிலர் ப்ரார்த்தனை செய்வது

**सकुटुम्बस्य मम अनुकूलं प्रयच्छ प्रयच्छ प्रतिकूलं नाशय नाशय संपदो वर्धय वर्धय धनधान्य समृद्धिं प्रयच्छ प्रयच्छ सर्वत्र विजयं प्रयच्छ प्रयच्छ ॥**

ஸகுடும்பஸ்ய மம அநுகூலம் ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரதிகூலம் நாஶய நாஶய ஸம்பதோ வர்த⁴ய வர்த⁴ய தன தான்ய ஸம்ருத்திம் ப்ரயச்ச ப்ரயச்ச ஸர்வத்ர விஜயம் ப்ரயச்ச ப்ரயச்ச. ॥ இதில் இஷ்டமானதை குருமுகமாக ஆரம்பித்துச் செய்யலாம்.

---

**தன் கையில் தநம் இருக்கும் போதும்**

# சாந்தோக்ய உபநிஷத்.



[ஸாமவேதத்தைச் சார்ந்த உபநிஷத் இது. ஸாமவேதத்தைச் சார்ந்த தலவகார உபநிஷத் எனும் கேநோபநிஷத் முன் கூறப்பட்டது. இது எட்டு ப்ரபாடகம் உள்ளது. ப்ரபாடகம் என்பது அத்யாயம் என்பது போலாம். இவைகளில் நூற்று நாற்பத்தொன்பது கண்டங்கள் உள்ளன. உபநிஷத்துகளில் சாந்தோக்யமும் ப்ருஹதாரண்யமுமே மிகப் பெரிய உபநிஷத்துகளாம்.]

ஓம் நமோ ப்ரஹ்மாதிப்யோ ப்ரம்ஹ வித்யா ஸம்ப்ரதாய கர்த்ருப்யோ | வம்ஶ ரிஷிப்யோ நமோ குருப்ய: ||

[ஆப்யாய யந்து என்பதே சாந்தி. அதன் கருத்து : உபநிஷத்தால் விளக்கப்படும் ப்ரும்மம், எனது அங்கமான வாக், ப்ராணன், கண், காது பலம் இந்த்ரியம் முதலியவைகளை த்ருப்திசெய்யட்டும். நான் எப்பொழுது ப்ரம்மத்தை அநாதரவு செய்யாமலிருக்கவேண்டும். அந்த ப்ரும்மமும் என்னை நிராதரவு செய்யாதிருக்கட்டும். அதேபோல் எப்பொழுதும் ப்ரும்மம் என்னை ஆதரிக்கட்டும். ஆத்மாவை யான் அறிந்தவுடன் உபநிஷத்துகளிலுள்ள ஸகல தர்மங்களும் என்னிடமிருக்கட்டும்.

ஆத்யாத்மிக ஆதி பௌதிக ஆதி தெய்விக துன்பங்கள் ஶாந்தி அடையட்டும்.]

கர்மகாண்டத்திலீடுபட்டவர்களுக்கு ப்ரணவம் மிகவும் பரிசயமானது. ஆதலால் உத்கீதம் என்று சொல்லப்படும் ப்ரணவ உபாஸனமே முதலில் ஆரம்பிக்கப்படுகிறது.

சராசரங்கள் நிறைந்த பூதங்களுக்குள் பூமி இரஸமானது. ப்ருதிவிக்குள் ஜலம் ரஸம். ஜலத்திற்கு ஓஷதிகள் ரஸம். ஓஷதிகளுக்குப் புருஷன் ரஸம். புருஷனுக்கு வாக் ரஸம். வாக்கிற்கு ருக்வேதம் ரஸம். ருக்வேதத்திற்கு ஸாமவேதம் ரஸம். ஸாமத்திற்கு ஓம்காரம் எனும் உத்கீதம் ரஸமாகும்.

எட்டாவதாயிருக்கின்ற உத்கீதம் ரஸங்களுக்கெல்லாம் ரஸமாயிருக்கிறது. உத்தமமானது. ப்ரும்மத்திற்கு இருப்பிடம் அதுவே. வாக்குதான் ரிக்கு. ப்ராணனே ஸாமம். ஓம் என்ற அக்ஷரமே உத்கீதம். ருக்கிற்கும் ஸாமத்திற்கும் காரணமான வாக்கும் ப்ராணனும் எப்பொழுதும் சேர்ந்து இரட்டையாகவே இருக்கும். உலகில் மிதுனங்கள்

சேரும்பொழுது இச்சையுண்டாவதுபோல், வாக்கும் ப்ராணனும் சேர்ந்து உண்டாகும் ஓங்காரம் ஸர்வ காமனைகளையும் தரும். உத்கீத அக்ஷரத்தை இங்ஙனமறிந்து உபாஸிப்பவன் ஸர்வ காமனைகளையும் அடைவான்.

ஒரு கர்மா அல்லது வித்யையை அதன் பொருள் தெரிந்தவரும், தெரியாதவரும் அனுஷ்டிக்கின்றனர். தெரிந்து அனுஷ்டித்தால் அது மிக்க வீர்யமுள்ளதாக இருக்கும். தேவர்களும் அஸுரர்களும் ஒருவரை ஒருவர் ஜயிக்கவேண்டுமெனக் கருதி போர்புரிந்தனர். இருவர்களும் ப்ரம்மாவின் பிள்ளைகளே. வானவர்கள் உத்கீதத்தோடு கூடிய யாகாதி கர்மாக்களைச்செய்தார்கள். நாஸிகா இந்த்ரியத்தையும், ப்ராணனையும் உத்கீத கர்த்தாவாக உபாஸித்தார்கள். அதையறிந்த அஸுரர்கள் பாபம் எனும் ஆயுதத்தால் நாஸிகேந்த்ரியத்தை அடித்தார்கள். அதனாலது நல்ல வாஸனையுடன் கெட்ட வாஸனையும் முகருகின்றது. அதைப்போலவே வாக்கு, கண், காது, மனஸ் இவைகளையுமடிக்க அவைகளும் நல்லது கெட்டது இரண்டையும் ஏற்கின்றன. பிறகு தேவர்கள் சுத்த ப்ராணனை ஆத்மாவாக உபாஸித்தார்கள். அதையும் அஸுரர்கள் அடிக்க முயன்றபோது சிலர் கீழே விழுந்தனர். ஆதலால் சுத்த ப்ராணனை அறிந்தவனுக்கு அபாயமில்லை. அவனை வெறுக்கின்றவனுக்கு தீமை உண்டு. முக்ய ப்ராணன் பாபமில்லாதது. அது மற்றவைகளை ரக்ஷிக்கின்றது. மரண காலத்தில் வாக்கு முதலிய இந்த்ரியங்கள் முக்ய ப்ராணனை அடைவதில்லை.

அந்த உத்கீதத்தை அங்கிரஸ் எனும் மஹரிஷி தன் ப்ராணனாக உபாஸித்தார். ஆதலால் உத்கீதம் அங்கிரஸ் என்றும் அழைக்கப்படும். அங்கத்தின் ரஸமே அங்கிரஸ் ஆகும். அதை ப்ருஹஸ்பதியும் கூட உபாஸித்தார். ஆதலால் அதை ப்ருஹஸ்பதி என்றும் கூறுவர். வாக்குக்கு பதியான அவரும் உத்கீதமாம். ஆயாஸ்யர் என்ற ரிஷி உபாஸித்ததால் அப்பெயரையும் பெற்றது. முகத்திலிருந்து உண்டானது என்று அதற்குப் பொருள். அங்ஙனமே தல்ப புத்ரரான பகர் உபாஸித்தார். அவர் நைமிஸாரண்யத்தில் உள்ள ஸத்ரயாகத்தில் உத்காதாவாக விருந்து எல்லோருக்கும் காமனை பூர்த்தியாகும்படி அதைக் கானம் செய்தார்.

---

**தானம் செய்யாதவரே லோபி எனப்படுவர்.**

(ஐப்பசியீ தொடர்ச்சி.)

ஆகாஶம் எங்குமுளது. பானை, வீடு—வெளி உள் ஆகிய இடங்களால் வெவ்வேருகக் கருதுகிருேம். ஆனல் அது ஒன்றேதான். அதேபோல் ஆத்மா ஒன்றே ஒவ்வொரு இடத்திலுமிருந்து வெவ்வேறு பெயர்களைப் பெறுகிறது. (20)

ஆஶ்சர்யம்! நான் பற்றற்ற சாந்தவடிவன். பிரக்ருதிக்கு மேலானவன். இதுவரை இதை அறியாமல் மோஹத்தால் ஏமார்ந்திருந்தேன்.

இந்த உடலை நான் பிரகாசப்படுத்துவதுபோல் உலகையும் பிரகாஶப்படுத்துகிறேன். ஆதலால் உலகெலாம் என்னைச்சார்ந்தது. அதவா. ஒன்றும் எனதென்பதில்லை. நான் குருவினது உபதேசத்தால் உடலையும் உலகையும் விட்டு எங்கும் பரமாத்மாவைக் காண்கிறேன்.

அலை நுரை சுழல் முதலிய எல்லாம் ஜலத்தைத்தவிர வேறில்லை. அதேபோல் ஆத்மாவைத் தவிர உலகம் வேறல்ல!

நன்கு கவனித்தால் நூலைத்தவிர வேஷ்டி புடவை வேறல்ல. அதேபோல் நன்கு கவனித்தால் ஆத்மஸ்வரூபமே உலகெலாம்.

கரும்புச்சாற்றைத் தவிர சர்க்கரைவேறல்ல, ஆத்மாவைத் தவிர வேறு பொருளல்ல உலகம்.

ஆத்மா இது என அறியாததால் உலகம் தனியாகத் தோற்றுகிறது. ஆத்மாவை அறிந்தால் உலகம் அதில் மறையும். கயிறு இது என அறிந்தபின் பாம்பென்ற பிரம்மம் பறந்தோடாதோ?

நான் பிரகாச ரூபன். அதைவிடவேறல்ல உலகம் பிரகாஶமாகத் தோற்றுமானல் அது ஆத்ம பிரகாஶமேயாம். அக்ஞானத்தால் என்னிடம் உலகம் தோன்றுகிறது. சிப்பியில் வெள்ளி, கயிற்றில் பாம்பு, ஜலத்தில் ஸூர்யன் என்பவைகள் எப்படி கல்பிதமோ அப்படித் தானிதுவும்.

என்னிடமிருந்தே உலகம் தோன்றி என்னிடமே லயிக்கின்றது. மண்ணில் பானை, ஜலத்தில் அலை.

---

தநம் தன்னுடன் வராது. தானம் செய்தால் வரும்

ஸுவர்ணத்தில் ஆபரணம் தோன்றி அதிலேயே லய மாகின்றதல்லவா? பிரும்மா முதல் ஸ்தம்பம் வரை உள்ள ஸகலமும் அழிந்தாலும் நான் என்பது அழியாம லிருக்கிறது. ஆதலால் ஆத்மாவுக்கே (எனக்கே) நமஸ்காரம்.

நான் உடல் உடையவன் போலிருந்தாலும் எங்கும் போவதில்லை. வருவதுமில்லை. உலகெலாம் வியாபித் திருக்கிறேன். ஆதலால் எனக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன்.

அஹோ! நான் எவ்வளவு ஸாமார்த்யமுள்ளவன்? எனக்கு ஸமம் யார்? உடலால் தொடாவிடிலும் உல கெலாம் என் ஸ்வரூபத்தால் வியாபித்திருக்கிறேன். ஆதலின் எனக்கே நானே நமஸ்காரம் செய்கிறேன்.

வாக்கிற்கும் மநதிற்கும் எட்டக்கூடிய எல்லாம் என் னைச் சார்ந்ததே. ஆனால் எனக்கென ஒன்றுமில்லை. ஆத லால் அப்படி ஆச்சர்யமாயுள்ள எனக்கு நமஸ்காரம்.

உண்மையில் அறிபவன் அறியப்படுவது அறிவு என்ற ஒரு பேதமுமில்லை. அக்ஞானத்தினுல் தான் எல் லாம் தோன்றுகிறது. நான் பற்றற்றவன்.

இரண்டு என்று எண்ணம் வந்தால் துக்கமும் கூடவே வரும். கண்ணில் காணப்படுவதெல்லாம் பொய். நான் ஒருவனே நிர்மலன், ரஸஸ்வரூபீ என்ற எண்ணம் ஒன்றே மருந்து.

நான் அறிவு மாத்ரனே. என்னுலே அக்ஞானத்தால் கல்பிக்கப்பட்டது உலகம் என்று நினைத்தால் நிர் விகல்பக ஸமாதியிலீடுபடுவேன்.

எனக்கு பந்தமோ மோக்ஷமோ கிடையாது. ஆதா ரமே இல்லாமல் தோன்றிய பிராந்தி அகன்றது. என் னிடத்தில் உலகம் காணப்படுகிறது. உண்மையில் என் னிடத்தில் என்னைத் தவிர வேறொன்றுமில்லை.

உலகம் என்ற ஒன்று உண்மையாக சரீராதிகளுடன் இல்லை. சுத்த சின்மாத்ரமான ஆத்மாவினிடம் ஏன் கல் பிக்கவேண்டும்?

உடல் ஸ்வர்க்க நரகம், பந்த மோக்ஷம், பயம் இதெல் லாம் கேவலம், கல்பனுமாத்ரமே தவிர சித்ஸ்வரூபியின் கார்யமல்ல.

---

என நன்கு அறிந்தவரும் பிறர்க்கு கூறுபவரும்

# பஞ்சாக்ஷரீ சிவஸ்தோத்ரம்.

(ஐப்பசிமீ தொடர்ச்சி)

4. भक्तप्रियाय भवरोग भयापहाय
दिव्याद्रि दिव्यभवनाय गुणार्णवाय ।
तेजोमयाय निखिलागम संस्तुताय
दारिद्र्य दुःख दहनाय नमः शिवाय ॥

ப$^4$க்தப்ரியாய ப$^4$வரோக பயாபஹாய
தி$^3$வ்யாத்$^3$ரி தி$^3$வ்யப$^4$வநாய கு$^4$ணார்ணவாய ।
தேஜோமயாய நிகி$^2$லாக$^3$ம ஸம்ஸ்துதாய
த$^3$ாரித்$^3$ர்ய து:கதஹநாய நம: ஶிவாய ॥

**भक्तप्रियाय** பக்தப்ரியாய – பக்த வத்ஸலனாயும், **भवरोग भयापहाय** ப$^4$வரோக ப$^4$யாபஹாய – ஸம்ஸாரப்பிணி பயத்தைப் போக்குகிறவராயும். **दिव्याद्रि दिव्यभवनाय** திவ்யாத்$^3$ரிதி$^2$வ்ய ப$^4$வநாய – கைலாஸத்திலுள்ள திருமாளிகையில் குடிகொண்டவராயும், **तेजोमयाय** தேஜோமயாய- ஒளிவடிவராயும், **निखिलागम संस्तुताय** நிகி$^2$லாக$^3$ம ஸம்ஸ்துதாய – எல்லா மறைகளாலும் போற்றப்படுகிறவராயுமுள்ள **दारिद्र्य दुःख दहनाय** த$^3$ாரித்$^3$ர்ய து:க$^2$ த$^3$ஹநாய – வறுமையெனும் துக்கத்தை அழிப்பவராயுமுள்ள **शिवाय** ஶிவாய – சிவனுக்கு **नमः** நம: – நமஸ்காரம்.

5. चर्माम्बराय शवभस्मविलेपनाय
भालेक्षणाय मणिकुण्डल मण्डिताय ।
मञ्जीरपादयुगलाय वृषध्वजाय
दारिद्र्य दुःख दहनाय नमः शिवाय ।

சர்மாம்பராய ஶவப$^4$ஸ்ம விலேபநாய
ப$^4$ாலேக்ஷணாய மணிகுண்டல மண்டி$^3$தாய ।
மஞ்ஜீரபாத$^3$யுக$^3$லாய வ்ருஷத்வஜாய
தாரித்$^3$ர்ய து$^3$;க$^2$த$^3$ஹநாய நம: ஶிவாய ॥

**चर्माम्बराय** சர்மாம்பராய – யானைத் தோலை வஸ்த்ரமாக அணிபவரும். **शवभस्मविलेपनाय** ஶவபஸ்ம விலேப

---

தாநம் செய்யாதது மிக வருந்தத்தக்கது.

ணுய - சலத்தின் சாம்பலைப் பூசிக்கொள்பவரும் **फालेक्षणाय** பாலேக்ஷணுய - நெற்றிக்கண்ணனும் **मणिकुण्डलमण्डिताय** மணிகுண்டல மண்டிதாய - மணிமயமான குண்டலத்தால் அலங்கரிக்கப்பட்டவரும் **मञ्जीर पादयुगलाय** மஞ்ஜீர பாத[3] யுக[3]லாய – இரு பாதங்களிலும் பாதச் சிலம்பு அணிந்தவரும் **वृषध्वजाय** வ்ருஷத்[4]வஜாய - வ்ருஷபக் கொடியுள்ளவரும் **दारिद्र्य दुःख दहनाय नमः शिवाय** தாரித்[3]ர்யது[3]:க[3] த[3]ஹநாய நம: ஶிவாய – தாரித்ரயம் எனும் துக்கத்தைக் கொளுத்துபவராயுமுள்ள சிவனுக்கு நமஸ்காரம்.

6. पञ्चाननाय फणिराज विभूषणाय
स्वर्गापवर्गफलदाय महेश्वराय ।
हेमांशुकाय भुवनत्रय वन्दिताय
दारिद्र्य दुःख दहनाय नमश्शिवाय ॥

பஞ்சானனுய ப[2]ணிராஜ விபூ[4]ஷணுய
ஸ்வர்க[3]ாபவர்க[3] ப[2]லதாய மஹேஶ்வராய ।
ஹேமாம்ஶுகாய பு[4]வனத்ரய வந்தி[3]தாய
த[3]ாரித்ரய து[3]:க[2]த[3]ஹனுய நமஶ்ஶிவாய ॥

**पञ्चाननाय** பஞ்சானனுய - ஐந்து முகம் உடையவரும் **फणिराज विभूषणाय** பணிராஜவிபூஷணுய - ஸர்ப்பராஜனை ஆபரணமாக அணிந்தவரும் **स्वर्गापवर्ग फलदाय** ஸ்வர்காபவர்கபலதாய–ஸ்வர்க்கம் மோக்ஷம் என்ற பயனை அளிப்பவரும் **हेमांशुकाय** ஹேமாம்ஶுகாய - பொன்னிறமான வஸ்த்ரமணிந்தவரும் **भुवनत्रयवन्दिताय** புவனத்ரய வந்திதாய – மூவ்வுலகங்களாலும் வணங்கப்பெற்றவராயும் உள்ள **दारिद्र्यदुःखदहनाय नमश्शिवाय** தாரித்ர்யது:க தஹனுய நமஶ்ஶிவாய–தாரித்ரய து:க தஹனரான சிவனுக்கு நமஸ்காரம்.

---

ஈயாதார் இருந்தென்ன இறந்தென்ன (பட்டணத்தார்)

7. मुक्ताय यज्ञफलदाय गणेश्वराय
गीतप्रियाय वृषभेश्वर वाहनाय ।
मातङ्ग चर्मवसनाय महेश्वराय
दारिद्र्यदुःख दहनाय नमः शिवाय ॥

முக்தாய யக்ஞப[2]லத[3]ாய க[3]ணேஶ்வராய
கீ[3]தப்ரியாய வ்ருஷபே[4]ஶ்வர வாஹனாய ।
மாதங்க சர்மவஸனாய மஹேஶ்வராய
த[3]ாரித்ர்ய து[3]:க[2]த[3]ஹனாய நம: ஶிவாய ॥

**मुक्ताय** முக்தாய – முக்தரும், **यज्ञ फलदाय** யக்ஞ பல தாய – யாகப்பலனை அளிப்பவராயும் **गणेश्वराय** கணேஶ் வராய – கணங்களுக்கு ஈசனாயும் **गीतप्रियाय** கீ[3]தப்ரியாய- கானத்தில் ப்ரியமுள்ளவராயும் **वृषभेश्वर वाहनाय** வ்ருஷ பேஶ்வர வாஹனாய – வ்ருஷபேஶ்வரனை வாஹனமாக உடையவராயும் **मातङ्गचर्मवसनाय** மாதங்க சர்மவஸனாய- யானைத்தோலை உடுத்துபவரும் **महेश्वराय** மஹேஶ்வராய- மஹேஶ்வரராயுமுள்ள **दारिद्र्यदुःख दहनाय** தாரித்ர்ய து:க தஹனாய – தாரித்ரய து:க தஹநரான **शिवाय** ஶிவாய – சிவனின்பொருட்டு **नमः** நம: – நமஸ்காரம்.

8. रामप्रियाय रघुनाथ वरप्रदाय
पुण्याय पुण्यचरिताय सुरेश्वराय ।
नन्दिप्रियाय नगराज सुताप्रियाय
दारिद्र्य दुःखदहनाय नमश्शिवाय ॥

ராமப்ரியாய ரகு[4]நாத[2] வரப்ரத[3]ாய
புண்யாய புண்யசரிதாய ஸுரேஶ்வராய ।
நந்தி[3]ப்ரியாய நக[3]ராஜ ஸுதாப்ரியாய
த[3]ாரித்ர்ய து[3]:க[2]த[3]ஹனாய நமஶ்ஶிவாய ॥

---

**रामप्रियाय** *ராமப்ரியாய* – இராமனிடம் ப்ரீதியுள்ள வராயும் **रघुनाथ वरप्रदाय** *ரகுநாத வரப்ரதாய* – இராம னுக்கு வரத்தை அளித்தவராயும் **पुण्याय** *புண்யாய* – புண்யஸ்வரூபியாயும் **पुण्यचरिताय** *புண்யசரிதாய* – புண் யம் தரும் சரிதம் உள்ளவரும் **नन्दिप्रियाय** *நந்திப்ரியாய* - நந்தியினிடத்தில் ப்ரியமுள்ளவரும் **नगराजसुताप्रियाय** *நக ராஜஸுதாப்ரியாய* – பர்வதராஜகுமாரியிடம் அன்புடை யவரும் **दारिद्य दुःख दहनाय** *தாரித்ர்ய து:க தஹநாய* – தாரித்ர்யமெனும் துக்கத்தை கொளுத்துபவராயுமுள்ள **शिवाय** *ஶிவாய* - சிவனுக்கு **नमः** *நம:* - நமஸ்காரம்.

9. **भक्त्या च दुःख दहनाष्टक मीश्वरस्य**
**संकीर्तयेत् पुरत एव पिनाकपाणेः ।**
**यस्तस्य शैलसुतया परिरब्धदेहो**
**रुद्रो ददात्यमृत मिष्टमनन्त लक्ष्म् ॥**

*ப⁴க்த்யா ச து³:க²த³ஹநாஷ்டக மீஶ்வரஸ்ய*
*ஸங்கீர்தயேத் புரத ஏவ பிநாகபாணே: ।*
*யஸ்தஸ்ய ஶைலஸுதயா பரிரப்³த⁴தே³ஹோ*
*ருத்³ரோ த³தா³த்யம்ருதமிஷ்ட மனந்த லக்ஷம் ॥*

**पिनाकपाणेः** *பிநாகபாணே:* - பரமசிவனுடைய **पुरतः** *புரத:* – எதிரில் **भक्त्या** *பக்த்யா* – பக்தியுடன் **दुःख दहनाष्टकं** *து³:க² த³ஹநாஷ்டகம்* – து:க தஹநாஷ்டகத்தை **संकीर्तयेत्** *ஸங்கீர்த்தயேத்* - படிக்கிறானோ **तस्य** *தஸ்ய* - அவ னுக்கு **शैलसुतया** *ஶைலஸுதயா* – பர்வத குமாரியால் **परिरब्धदेहः** *பரிரப்ததேஹ:* – ஆலிங்கனம் செய்யப்பட்ட சரீரத்தை உடைய **रुद्रः** *ருத்ர:* – பரமேஶ்வரன் **अनन्तलक्ष्मं** *அனந்தலக்ஷம்* – அளவற்றதும் **इष्टं** *இஷ்டம்*-இஷ்டமாயும் **अमृतं** *அம்ருதம்* – அழிவற்றதும் உள்ள செல்வத்தை **ददाति** *த³தா³தி*-அளிக்கிறார்.

*பஞ்சாக்ஷரீ சிவஸ்தோத்ரம் முற்றிற்று.*

---

**இவைகளே லோபத்திற்கு முக்கிய காரணம்.**

# மஹாபாரதப் பூஞ்சோலை.

பாரதகேஸரி ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

வேதவ்யாஸ மஹாமுனிவர் அருளிய 'மஹா பாரதம்' எனும் இதிஹாஸத்தை, ஜனமேஜய மஹா ராஜன் செய்த ஸர்ப்பயாகத்தில், அங்கு கூடியிருந்த பல பெரியோர்கள்கேட்க, வ்யாஸ சிஷ்யரான வைசம்பாய னர் கூறி அரங்கேற்றினர். ஸர்ப்பங்களை அழிக்க விரும்பி

## ஸர்ப்ப யாகம்.

ஜனமேஜயன் யாகம் செய்தான். தக்ஷகன், வாஸுகி, கார்கோடகன் முதலிய நாகர்களை அக்னியில் ஆஹுதியாக இட்டு, அழிக்க ஏற்படுத் தின இந்த யாகத்தைக் காணவும் நடத்திக் கொடுக்க வும் பல பெரியோர்களும், தபஸ்விகளும், பல ரிஷி களும் ஆங்கு சேர்ந்திருந்தனர்.

கொடிய ஹிம்ஸை அல்லவா இது? இந்தயாகத்தி னால் ஜனமேஜயன் எந்த ஸ்வர்க்கத்தைப் பிடிக்கப் போகிறான்? தக்ஷகன் முதலான நாகர்களை நாம் பூஜிக் கவும் பூஜிக்கிறோம். இதை ஏற்றுக் கொள்ள அக்னிக்கு தான் எவ்வாறு பிடித்தது? அது போகட்டும், இந்த பயங்கர வேள்விச் சாலையையா மஹாபாரதம் வெளி யிடும் அரங்கமாகக் கொண்டார் வ்யாஸ முனிவர்? இதெல்லாம் என்ன விந்தை?

## ஸர்ப்ப யாக காரணம்.

உதங்கர் என்ற தபஸ்வி தன் குருவுக்கு தக்ஷிணை கொடுக்க, நாகரத்ன குண்டலம் தேடிச் சென்றார். அத் தகைய குண்டலம் ஒன்று பௌஷ்யன் என்ற அரசனின் மனைவியிடம் இருக்கிறது என்று அறிந்து அங்குசென்று அதையாசித்துப் பெற்றார். திரும்புகிற வழியில் அதை தக்ஷகன் என்ற நாகராஜன் கபடமாகக் கவர்ந்து சென்று விட்டான். உதங்கர் மிகுந்த கஷ்டமுடன் அவனைத் தொடர்ந்து பாதாளம் அடைந்து, பல இன்னல்களுக்கு இடையே, அந்த குண்டலத்தைப் பெற்று, குருவிடம் சேர்த்தார்.

தன்னை வீணில் துன்புறுத்தின இந்த தக்ஷகனை பழி வாங்க வேண்டுமென்று நினைத்த உதங்கர், ஹஸ்தின

---

*பெண்களிடமும் ஸ்வர்ணத்திலும் பிரமையுண்டு.*

புரத்தில் ஜனமேஜய மஹாராஜனை அணுகினர். ஜனமேஜயனுக்குத் தக்ஷகனிடம் கோபத்தை உண்டு பண்ணினர். உதங்கர், "ஜனமேஜயா, நீ சிறு குழந்தையாக இருக்கும் பொழுது உன் தந்தையான பரீக்ஷித்தை இந்த தக்ஷகன் கடித்துக் கொன்றான். காச்யபர் தடுத்தும் கேளாமல், நிரபராதியான உன்பிதாவை வஞ்சித்து தீண்டி விட்டான். அகாரணமாக என்னையும் குரு தக்ஷிணை கொடுக்க முடியாமல் தடுத்து விட்டான். இவனை எரியும் அனலில் தள்ளி அழித்து விட வேண்டியது, உன் பிதாவுக்கு நீ செய்ய வேண்டிய கிரியையாகும்" என்று போதித்தார். உதங்கருடைய மொழிக்கேட்டு சீறி எழுந்தான் ஜனமேஜயன். மந்திரிகள், மறையவர்கள் அனைவரையும் கலந்து ஆலோசித்து வேதியர்களும், பௌராணிகர்களும் "ஸர்ப்ப ஸத்ர" விதியைச் சொல்ல அதன்படி ஸர்ப்ப ஸத்ரம் செய்ய இசைந்தான். மந்த்ரங்களால் பாம்புகளை இழுத்து அக்னியில் தள்ளிப் பொசுக்குவதை நடத்திக் கொடுக்கவும், காணவும் ஸோமஸர்வர், சண்டபார்க்கவர், ஜைமினி, சாரங்கர், பிங்களர், மௌத்கல்யர், வேதவ்யாஸர் முதலிய மஹரிஷிகளும்; அஸிதர், தேவலர், நாரதர், பர்வதர் என்ற தேவரிஷிகளும் ஒருங்கே சேர்ந்து இருந்தனர். ஸர்ப்பங்கள் பலவும் மாலை மாலையாக சீறிப் பெரும் சப்தமிட்டு நடுங்கித் துடித்து, வேள்வி குண்டத்தில் விழுந்து அழிவது பார்க்க மிகவும் பயங்கரமாக இருந்தது.

இந்த ஸர்ப்பப் பிறவிகளுக்கும் இப்படி ஒரு தலைவிதி இருந்தது போலும். இவைகள் ஒருநாள் வேள்வித் தீயில் வீழ்ந்து அழியவேண்டுமென இவைகளின் தாயே ஒரு சமயம் சாபம் கொடுத்திருந்தாள். காச்யபரின் மூலம் ப்ரும்மசிருஷ்டி உலகில் பெருகியது. காச்யபருக்கு பல மனைவிகள். கத்ரு, வினதை இவர்களில் கத்ருவுக்குப் பாம்புகள் பிறந்தன. வினதைக்கு அருணன் கருடன் பிள்ளைகள். வினதையுடன் போட்டியிட்ட கத்ரு தன்பிள்ளைகளை ஒருசமயம் தன் சார்பில் பொய் சாட்சி சொல்லச் சொன்னாள். அதற்கு உடன்படாத பிள்ளைகளுக்கு இப்படி ஒரு சாபம் கொடுத்திருந்தாள். அது பலிக்கும் நாள் வந்தது.

---

***அது பிரும்மாவின் படைப்பிலே ஏற்பட்டதாம்.***

## யாகம் நிறைவேருமை.

இவ்வளவு ஏற்பாடுகளுடன் ஏற்படுத்திய ஸர்ப்ப ஸத்ரம் பாதியிலே நின்று விட்டது. யாகசாலை யமைத்த ஸ்தபதியே சொன்னுன். " அரசே இந்த சபை அமைத் திருப்பதைப் பார்க்கையில் யாகம் கடைசி வரை நடக் குமா என்பது சந்தேகம். ஒரு பிராம்மணன் காரண மாக ஆரம்பிக்கப்பட்ட இந்த வேள்வி ஒரு பிராம் மணனுலேயே நின்று போகும் என்று தோன்றுகிறது " என்ருன்.

ஜனமேஜயன் யாகசாலை வாசலில் ஒருநாய் நின்று கொண்டிருந்தது. அதை அரசன் சகோதரர்கள் அடித்து துரத்தினர். வலிபொறுக்காமல் அந்த நாய் அழுது கொண்டே தன் தாயான தேவலோக ஸரமை (நாய்) யிடம் முறையிட்டது. தன் பிள்ளை நிரபராதி என்று அறிந்த ஸரமையும் ஜனமேஜயனிடம் வந்து சாபம் கொடுத்தது. " உன் யாகத்திற்கு பாதியில் இடையூறு வந்து சேரும்" என்று சொல்லியது.

இந்த ஆரம்பத்தடைகளை அறிந்தும் தளராமல் ஜன மேஜயன் ஸோமசர்வர் என்ற மந்திரசக்தி நிறைந்த ஒரு தபஸ்வியைப் புரோகிதராக வரித்துக் கொண்டான். அந்த ஸோமசர்வருக்கு ஒரு குணம் உண்டு. அவரை எந்த பிராம்மணனும் எதை யாசித்தாலும் உடனே இல்லை என்னுது கொடுத்து விடுவார். இந்த உதார குணமே யாகம் முடிவு பெருமல்போக ஒரு காரணமாக வும் இருந்தது.

## ஜரத்காரு.

ஜரத்காரு என்றவோர் முனிவர் வெகுகாலமாக விவா ஹம் செய்து கொள்ளாமல் இருந்தார். ஜரை (மூப்பை யும்) யையும் லக்ஷ்யம் செய்யாமல் இருந்தார் என்பதால் இவருக்கு இந்தப் பெயர் ஏற்பட்டதாம். ஒருநாள் தன்னு டைய பித்ருக்கள் தலைகீழாகத் தொங்குவதைக் கண்ணு ற்ருர். " தான் விவாஹம் வேண்டாது ஸந்ததி இன்றி இருப்பதால் தன்குலம் தன்னுடன் நசிந்துபோகும். இனி பித்ருக்களுக்கு பிண்டோதகம் முதலிய கடமைகளைச் செய்ய யாரும் இல்லாமல் போய்விடுவர். பித்ருக்களுக்கு

ஆபத்தான நிலைமை நம்முடைய ப்ரும்மசர்ய வ்ருதத்தால் விளைந்தது'' என்று அறிந்து கொண்டு ஸந்ததிக்காக விவாஹம் செய்துக்கொள்ள தீர்மானித்தார். அதற்கு சில நிபந்தனைகளையும் ஏற்படுத்திக்கொண்டார். வருகிற பெண்ணுக்கு தன் பெயரேயிருக்க வேண்டும். பெண்ணைப் பெற்றவர்கள் தாமே தன்னைத் தேடிவந்து பெண்ணைக் கொடுக்க வேண்டும். ஸந்ததி உண்டானதும், மறுபடி தவத்திற்கு சென்று விடுவது என்று நிச்சயம் செய்துக் கொண்டார். இது பலனளிக்கக் காணும். பெண்ணுக்கு 'ஜரத்காரு' என்று பெயரை எந்த பெற்றோர்கள் வைக்க நினைப்பார்கள்? ஏழை தபஸ்வி, வயது சென்றவருக்கு யார் தாமே வலியத்தேடி பெண்கொடுக்க வருவார்கள்? பலகாலமும் அலைந்தார். பிறகு 'ஜரத்காரு' என்று உரத்தக் கூப்பிட்டுக் கொண்டும் தன் நிபந்தனையையும் சொல்லிக்கொண்டும் திரிந்தார்.

இந்த விநோத பிராம்மணரின் போக்கை, வாஸுகி என்ற நாகராஜன் தெரிந்துக் கொண்டான். இப்பொழுது அவனுக்கும் அவன் குலத்திற்கும் பிராணாபாயம் ஏற்பட்டிருக்கிறது. அதைப் போக்கிக் கொள்ள, இந்த மகா தபஸ்வியின் தயவைநாடினான். தன்னுடைய தங்கைக்கு ஜரத்காரு என்று திடீர்ப்பெயரிட்டான். பூலோகமெங்கும் தனக்குப் பெண்கொடுப்பவரைக் காணாமல் நாகலோகம் நோக்கி வந்த ஜரத்காரு என்ற முனிவரை வினயமுடன் அணுகி தன் ஸஹோதரியை ஏற்றுக்கொள்ள வேண்டினான். அவரும் தன் நியமத்தை மறவாமல் 'பெண்ணின் பெயரென்ன' என்றார். 'ஜரத்காரு' என்றான் வாஸுகி. 'ரொம்ப சரி என் நியமமெல்லாம் தெரியுமல்லவா' என்றார். 'தெரியும்' என்று கன்னிகாதானம் செய்துக் கொடுத்தான்.

## அஸ்தீகர்.

இல்லறத்தில் ஈடுபட்டு, நாகலோகத்திலேயே, தன் மனைவியுடன் ஜரத்காரு கொஞ்சகாலம் தங்கியிருந்தார். ஒருசமயம் அஸ்தமனகாலம் நெருங்கிக்கொண்டிருந்த போது ஜரத்காரு தூங்கிக்கொண்டிருந்தார். இதைக் கண்ட அவர் பார்யை "ஸந்த்யா காலம் வந்து விட்டது, அனுஷ்டானம் தவறிப்போகும். எழுப்பாமல் இருப்பது

குற்றம்" என்று அவரை எழுப்பினாள். ஆனால் அவரோ அதையே குற்றமாகக் கொண்டு, வீட்டை விட்டுப் புறப்பட்டார். 'நான் தூங்கும் பொழுது ஸூர்யனும் அஸ்தமனமாகான். என் தவ வலிமையை நீங்கள் அறியவில்லை. எனக்கு இது அவமானம்' என்று கோபித்துக் கொண்டு, மனைவி எவ்வளவு மன்றாடியும் செவி ஏற்காமல் சென்று விட்டார்.

வாஸுகி இதைக்கேட்டு மிகவும் மனமுடைந்து போனான். தன் தங்கையை அழைத்து 'ஸகோதரீ, உன்னை இந்த கிழவருக்குக் கொடுத்த காரணம் நீ அறிவாயா? இவர் மஹா தபஸ்வி. இவருக்குப் பிறக்கும் பிள்ளை பெரிய தேஜஸ்வியாக இருப்பான் என்பதில் சந்தேகமில்லை. அவன்மூலம் இப்பொழுது நேரவிருக்கும் ஸர்ப்பங்களுடைய நாசத்தைப் போக்கிக் கொள்ளலாம் என்று நினைத்திருந்தேன். அத்தனையும் வீணாகி விட்டதே' யென்று துக்கித்தான். ஸஹோதரி "அண்ணா கவலை வேண்டாம். நானும் இதை அறிவேன். இதையே அவரிடம் மன்றாடிக் கேட்டேன். அவரும் 'அஸ்தி' என்று சொல்லிச் சென்று விட்டார்." என்று நாணமுடன் ஆறுதல் அளித்தாள். பிள்ளையின் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தனர் அனைவரும்.

சுபவேளையில் அக்னிபோல் ஒளிரும் ஒரு பாலகன் பிறந்தனன். எல்லோருக்கும் நல்வாழ்வு இருக்கச் செய்கிறவன் என்ற நினைவில், இவனை 'அஸ்தீகன்' என்று அழைத்தனர். அஸ்தீகனும் வளர்ந்து எல்லா வித்யைகளிலும் மிகுந்த தேர்ச்சியுடன் விளங்கினான். அஸ்தீகனை வாஸுகி ஜனமேஜயனிடம் அனுப்பினான். ஸர்ப்ப யாகத்தை நிறுத்தி வரும்படி வேண்டிக்கொண்டான். அஸ்தீகனும் தன்குலத்தைக் காக்க உறுதிகொண்டு புறப்பட்டான்.

இச்சிறு பிள்ளையும் ஜனமேஜயன் செய்யும்யாகசாலையை விரைவில் அடைந்தான். கவனமாக இருந்தகாவலர் சிறுவனை உள்ளேசெல்ல அனுமதிக்க வில்லை. அஸ்தீகனும் வெளியே நின்றபடி அரசனையும், கூடியுள்ள ஸபையினரையும் இனிய சொற்களால் துதித்தனன். ஸ்தோத்திரம் கேட்டு மயங்காதவரும் உளரோ? ஜனமேஜயனும் மயங்கி, இப்பிள்ளையைக் கண்டு

---

***வாங்கிய தநத்தை திருப்பித் தரவே சிலர் வருந்துவர்.***

"இவன் சிறியவனுயினும் சீலத்தாலும் தவத்தாலும் முதியவனே" என்று கருதி, விரும்பிய வரத்தைக் கொடுக்க முன் வந்தான். இதை ஸபையினரும் ஆமோதித்தனர். அது சமயம் ஸர்ப்பயாகத்தில் முக்கியமான கட்டம் அங்கு நடந்துக்கொண்டு இருந்தது. முக்கிய சத்ருவான தக்ஷகனை ரித்விக்குகள் மந்த்ரங்களால் இழுத்துக் கொண்டிருந்தனர். தக்ஷகன் நடுங்கித் தனது நண்பனுன தேவேந்திரனைச் சரண் அடைந்தான். மந்திர சக்தி விடாமல் தேவேந்திரனுேடு தக்ஷகனை இழுத்துவிட்டது. தேவேந்திரன் தனக்கு வரவிருக்கும் விபரீதத்தைக் கண்டு, தன் உத்தரீயத்தில் மறைந்திருந்த தக்ஷகனைக் கைவிட்டு தன்னிடம் சென்ருன். இப்பொழுது தக்ஷகன் தவித்த வண்ணம், ஆகாசவெளியில் ஊசலாடிக் கொண்டிருக்கிருன். இதைப் பார்த்து விட்டான் அஸ்தீகன். தன் மாதுலன் வாஸுகியின் வேண்டுகோளை நினைவு கொண்டான். எல்லோரும் பரபரப்புடன் இருக்கும் வேளையில் அரசனை வரம் வேண்டி நின்ருன். அரசனும் 'கொடுத்து விட்டேன், நீர்கேளும் என்ருன். 'அரசே, எனக்குப் பொன்னும், மணியும், போகமும் வேண்டாம். இந்தப் பொழுதிலேயே, இந்த யாகத்தை நிறுத்திவிடவேண்டும்" என்று அஸ்தீகன் சொல்ல, அனைவரும் திகைத்தனர். ரித்விக்குகள் காரிய ஸாதகம் காணும் இவ்வேளையில் எப்படி நிறுத்துவது இந்த ஸத்ரத்தை என்று கலங்கினுன் அரசன். ஆனுல் ரித்விக்குகள் (அவர்களில் கொடுக்கும் இயல்பு படைத்த ஸோமச்ரவஸ்ஸும் இருந்தார்என்பது கொள்ளத்தக்கது) அனைவரும் ஏகோபித்து "நிறுத்துவதே சிறந்தது, அஸ்தீகருக்குக் கொடுத்த மொழி பிசகவேண்டாம்" என்று கூறினர். அஸ்தீகர் தக்ஷகனைக் காப்பாற்றி அனுப்பினுர். தக்ஷகன் விடுபட்டாலும் பெருவாரியான விஷஸர்ப்பங்கள் அழிந்து விட்டனயென்று அரசனும் ஒரு வாறு சாந்தம் அடைந்தான். தன்னெதிரில் கண்ட ஒளிரும் தவத்தின் சின்னமாம் சிறுவனைப் போற்றி மகிழ்ந்தான். யாகத்திற்கு வந்திருந்த ஸபையினரும் இது இப்படித் தான் முடியும். இது தான் சரி, இதை நாங்கள் முன்பே அறிவோம் என்று பேசிக்கொண்டனர். அனைவர்க்கும் நிம்மதி அளித்தான் அஸ்தீகன்.

---

***கேட்டால் கோபம் வரும், எறிந்து விழுவர்.***

## ஸர்ப்பங்களின் ஸத்யம்.

அஸ்தீகன் வெகுமதிகள்பலபெற்று, பலரும் கொண்டாட நாகலோகம் சென்ருன். அங்கு வாஸுகியும் எல்லா நாகர்களும், நன்றிப்பெருக்குடன், தங்களை வாழ்விக்க வந்தவன் என்றும், உயிர்பிச்சை அளித்த உத்தமன் என்றும் மகிழ்வு பொங்கப் போற்றினர். அஸ்தீகனும் ஸர்ப்பங்களிடம் ஸத்யம் வாங்கிக்கொண்டான். இந்தச் சரித்திரத்தைக் கேட்பவருக்கு எந்த தீங்கும் நீங்கள் செய்யக் கூடாது. என்னை நினைப்பவரை நீங்கள் கிட்டவும் அணுகக்கூடாது. கீழ்கண்ட வாக்கியங்களை இரவிலும் பகலிலும் நினைப்பவருக்கு உங்களால் எந்த தோஷமும் ஏற்படலாகாது என்பதே அவன் கொண்ட உறுதிமொழிகள்.

जरत्कारो जरत्कार्वां समुत्पन्नो महायशाः ।
अस्तीकस्सत्य सन्धोमां पन्नगेभ्योभिरक्षतु ॥

ஜரத்காரோர் ஜரத்கார்வாம் ஸமுத்பன்னோ மஹாயசா: |
அஸ்தீகஸ் ஸத்ய ஸந்தோமாம் பன்னகேப்யோபிரக்ஷது ||

பொருள்:— ஜரத்காரு என்ற தபஸ்விக்கும் ஜரத்காரு என்ற நாகப்பெண்ணுக்கும் தோன்றின பெரும் கீர்த்தி உள்ளவனும், ஸத்யஸந்தனுமான அஸ்தீகன் பாம்புகளிடமிருந்து என்னைக் காப்பாற்றட்டும்.

अप सर्प सर्प भद्रन्ते दूरं गच्छ महायशाः ।
जनमेजयस्य यज्ञान्ते अस्तीक वचनं स्मरन् ॥

அபஸர்ப்ப ஸர்ப்ப பத்ரம்தே தூரம் கச்ச மஹாயசா: |
ஜனமேஜயஸ்ய யஜ்ஞாந்தே அஸ்தீக வசனம் ஸ்மரன் ||

பொருள்:— ஸர்ப்பமே நகர்ந்துச் செல். உனக்கு நன்மை உண்டாகும். தூரம் சென்று விடு. ஜனமேஜயனுடைய (ஸர்ப்ப) யாகமுடிவில் அஸ்தீகன் சொன்ன உறுதி மொழிகளை நினைவில்கொண்டு சென்றுவிடுங்கள். உண்மையைக் காத்த பெரும்கீர்த்தி அடைவீர்கள்.

இவ்வாறு ஜனமேஜய ராஜன் செய்த ஸர்ப்ப யாகத்தின் விமரிசையை அநேக பழைய ரஹஸ்யமான உபாக்யானங்களுடன் அநேக அத்யாயங்களிற் சேர்த்து தன்

---

மஹாபாரத க்ரந்தத்துக்கு முகவுரையாக அமைத்துக் கொடுத்தார் வேதவ்யாஸர். இந்த இதிஹாஸத்தை ஸர்ப்பயாக காலத்தில் தன் சிஷ்யர் வைசம்பாயனர் மூலம் ப்ரகடனப்படுத்தினர்.

உயர்ந்த பலன் எதுவும் காணமல், க்ரோதத்தினல் விளைந்தது இந்த ஸர்ப்ப யாகம். எனினும் இதற்கு மஹ ரிஷிகளும், ப்ரும்மரிஷிகளும், தேவரிஷிகளும் ஸம்மதித்து கலந்து கொண்டனர். எத்தனையோ பாம்புகள் ஹோமத் தீயில் மாண்டன. முடிவு இன்னும் விபரீதமாகாமல் அஸ் தீகன் தோன்றி அனைவருக்கும் அபயம் அளித்தான்.

க்ரோதத்தினல் எழுந்தது மஹாபாரத யுத்தம். அர சில் ஆசைகாரணமாக வளர்ந்தது தாயாதிச் சண்டை. இதையறிந்தும் பல பெரியோர்களும், நீதிமான்களும் இதில் கலந்து கொண்டனர். குருக்ஷேத்ரத்தில் நடந்த இந்த ரண யக்ஞத்தில் தோன்றினன் பார்த்த ஸாரதி. தருமம் ஜயிக்கும் என்று அனைவருக்கும் காட்டி நல்லோ ரைப் பாதுகாத்தான் வாஸுதேவன்.

தீதில் நன்னெறி காட்டும் ரங்கன் எம்மான் தம் பெருமை விளங்கும் இப் பாரத நந்தவனத்திற்கு, அஸ்தீக சரித்திரம் ஓர் அழகிய முகப்பாக அமைந்தது பொருத்தமே. (தொடரும்)

---

## தார்மிகச் செய்திகள்:

**4 வேத பாஷ்ய பரீக்ஷை:** கலவை ப்ருந்தாவந ஷஷ்டி பூர்த்தி ட்ரஸ்ட் ஆதரவில் ஸ்ரீ பரமாசார்யாள் முன்னிலையில் 6—9—59 முதல் ஒரு வாரம் பரீக்ஷை நடந்து 20 ஆயிரத்திற்குமேல் ஸம்பாவனை நடந்தது.

**ராமேச்வரத்தில் ஸ்ரீ சங்கர மடம்:** 2½ லக்ஷ ரூபாய் செலவில் ராமேச்வரத்தில் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகள் ஓர் மடம் கட்டத் திட்டமிட்டிருக்கிறார்கள். சென்ற ஆவணியில் அஸ்திவாரக் கல் நாட்டப்பட்டது.

**ஸ்ரீ பூர்ணநந்த வித்யா பீடம்:** சென்னை தம்புசெட்டிதெருவில் ஷ பீடம் வாராஹீ நவராத்ரி கொண்டாடிற்று. பலஜட்ஜுகளும் உத்தியோகஸ்தர் களும் ஆதரித்தனர்.

**ஸ்ரீ ராமஸமாஜ்:** ஸ்ரீநவராத்ரி பற்பலஇடங்களில் நடந்தன. மாம்பலம் அச்வமேத மஹா மண்டபத்தில் **பாரத கேஸரி ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்** காலக்ஷேப ரூபமாக தேவீ பாகவதம் நடத்தினர். இதுவரை எவரும் காலக்ஷேபமாக இதைக் கூறாததால் பல்லாயிரம் பக்தர்கள் பக்தியுடன் ச்ரவணம் செய்தார்கள்.

---

பெரியோர் கடன் வாங்கமாட்டார்கள்.

## ஸாக்ஷாத்! ஸாக்ஷாத் !!

"உமது பிள்ளை ரொம்ப சூடிகை யாக இருக்கிறானே! வயது 12 இருக்குமோ?''

'' ஆமாம்!''

'' அவனுக்கு இப்போது வேத அத்யயனம் நடக்கிறதோ?''

"ஆமாம்; இருந்தாலும் காவ்யங்களில்தான் அவனுக்கு அதிக ருசி ஏற்பட்டிருக்கிறது. ஸாஹித்யம் கூடச் செய்து விடுகிறான்.''

'' அப்படியா? பேஷ்! ஏய், பயலே! எங்கே நான் போஜனம் செய்து முடிப்பதற்குள் என்னைப்பற்றி ஒரு ஸ்லோகம் யோசித்துவை பார்க்கலாம்!''

# நவரஸம்

★ ★ ★ "அக்ஷய பரணி''

அச்சிறுபிள்ளையின் தந்தை தென்னாற்காட்டிலுள்ள வெங்கந்தூர் எனும் கிராமத்தில் பரம சிவபக்தராய் விளங்கி வந்த ராமபத்ர சாஸ்த்ரிகள் என்பவர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் ஓர் நாள் அவர் வீட்டிற்கு அதிதியாக வந்திருந்தார் பருத்தியூர் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்த்ரிகள். பக்திமயமான தனது ராமாயண ப்ரவசனங்களால் பல்லாயிரக்கணக்கான மக்களின் மனதில் தனி இடம் கொண்டவர் இந்த மஹான். இவ்விருவருக்குமிடையில் தான் மேற்சொன்ன சம்பாஷணை நடந்தது.

விருந்து முடிந்தது; சிறுவனும் ஸ்லோகம் செய்து முடித்தான். திண்ணையில் அமர்ந்தவண்ணம் வாசித்துக் காட்டச் சொன்னார்கள் ஸ்லோகத்தை; சிறுவனும்,

"ஸாக்ஷாத் ஸஹஸ்ர வக்த்ர:<br>
பருத்தியூர் வாஸி பண்டித ஸ்ரேஷ்ட:''<br>
என்று தொடங்கினான்.

பருத்தியூர் வாஸி = பருத்தியூரில் வசிக்கும்<br>
பண்டித ஸ்ரேஷ்ட: = பண்டிதர்களில் சிறந்தவரான (இவர்)<br>
ஸாக்ஷாத் = ஸாக்ஷாத்<br>
ஸஹஸ்ரவக்த்ர: = ஆதிசேஷனே!

---

உபவாஸமிருந்தாலும் யாசிக்கார். கடன் கேளார்.

தனது ஆயிரம் முகங்களால் ஆயிரம் வித்தைகளை ஒரே சமயத்தில் உபதேசிக்கும் ஆற்றலும், ஞானமும் கொண்ட ஆதிசேஷனின் அவதாரமே இந்த மஹான் என்று பொருள்.

பிள்ளையின் தந்தை மகிழ்ச்சியடைந்தார். சாஸ்த்ரிகளின் முகத்தை ஆவலுடன் நோக்கினார். ஒரு நிமிஷம் நிசப்தம் நிலவியது. குறுநகையுடன் பருத்தியூர் சாஸ்த்ரிகள் கேட்டார் :-

" ஏது ஸ்வாமி! உமது பிள்ளை குறும்புக்காரன் போலிருக்கிறதே! ஸ்லோகம் செய்யச்சொன்னால் சிலேடை அல்லவா செய்துவிட்டான்? "

ஒன்றும் தெரியாமல் விழித்தார் பிதா. விநயத்துடன் கைகட்டி நின்றான் பிள்ளை.

" உமக்குத் தெரியவில்லையா? நான் புரிந்துகொண்டு விட்டேன். உபன்யாஸங்கள் செய்யும்போது எனக்கு ஒரு பழக்கம் உண்டு. அடிக்கடி 'ஸாக்ஷாத்' என்பதைச் சேர்த்துச் சேர்த்துப் பேசுவேன். ஸாக்ஷாத் ராகவன், ஸாக்ஷாத் ஸீதை, ஸாக்ஷாத் விஸ்வாமித்ரர் — இப்படி நான் சொல்வதை உமது பிள்ளை கேட்டுவிட்டு அதையல்லவா சிலேடையாகக் கூறிவிட்டான்! இப்போது பாரும் அவன் ஸ்லோகத்தை :

பருத்தியூர் வாஸி = பருத்தியூரில் வஸிக்கும்
பண்டித ஸ்ரேஷ்ட: = பண்டிதரில் சிறந்தவரான (இவர்)
ஸாக்ஷாத் = 'ஸாக்ஷாத்' என்பதை
ஸஹஸ்ர வக்த்ர: = ஆயிரம் தடவை சொல்பவர்.

வியப்பில் மூழ்கிப்போன தந்தை தன் பிள்ளை அபசாரம் செய்துவிட்டானே என்று கலங்கினார். குணக்கடலான சாஸ்த்ரிகளோ சிறுவனை இறுகச் சேர்த்துக் கட்டிக் கொண்டு, " இச்சிறுவயதிலே இவ்வளவு சாமர்த்தியமா! பெரும் கீர்த்தியோடு வாழப்பிறந்தவன் இவன்! " என்றெல்லாம் மனமாற ஆசீர்வதித்தார்.

மஹானின் வாக்கு பொய்க்குமா? இச்சிறுவர்தான் பிற்காலத்தில் தமது ஒப்பற்ற கவிதா சக்தியினாலும், அம்ருத வர்ஷம் போன்ற ப்ரவசனங்களினாலும் தென்னாற்காட்டிற்கே திலகமாக விளங்கிய மஹோபன்யாஸி வெங்கந்தூர் ஸ்ரீ கணபதி சாஸ்த்ரிகள் ஆவர். இவருடைய மூன்றாவது புதல்வர்தான் நமது சஞ்சிகையின் ஆசிரியர்!

---

**கடன் வாங்கிவிட்டால் தரும் வரை தவிப்பர்.**

## விழவே விழாது !

பிறந்த மண்ணைப் பற்றி பெருமை பேசிக்கொள் வது மனித இனத்தின் மரபு போலும்! அதுவும் பக்கத்து ஊரைத் தாழ்த்திப்பேசி அதனாலே தன் ஊருக்கு ஏற்றம் கொடுத்து விட்டதாக எண்ணும் இயல்பு ஆங்கில இலக் கிய மேதை ஜான்ஸன் அவர்களுக்கே இருந்ததாம்! ஆங்கில அகராதியின் ஆதி கர்த்தாவாகத் திகழ்ந்த ஜான்ஸன் இங்கிலாந்தைச் சேர்ந்தவர். அருகிலிருக்கும் நாடான ஸ்காட்லாந்தைப் பற்றி எப்போழுதுமே அவருக் குத் தாழ்வான அபிப்ராயம். தன் பேச்சுகளிலும் எழுத் துக்களிலும் ஸமயம் நேரும் போதெல்லாம் அந்த நாட்ட வர்களை நையாண்டி செய்த வண்ணம் இருப்பார். அதில் ஒரு அதிசயம் என்னவென்றால் அவருடைய அந்தரங்க சிஷ்யரும் அவரிடம் தன் உயிரையே வைத்திருந்தவரு மான பாஸ்வல் என்பவர் ஸ்காட்லாந்தைச் சேர்ந்தவர். தன் நாட்டைப் பற்றித் தன் குருநாதர் கொண்டிருக்கும் தப்பான எண்ணத்தை மாற்றிவிட வேண்டுமென்று பாஸ்வல் அரும்பாடு பட்டார். இதற்காக ஒரு ஸமயம் ஜான்ஸனைத் தன் நாட்டில் ஒரு சுற்றுப்பிரயாணம் செய் யும்படி அழைத்துப் போனார். பல இடங்களைக் காண் பித்தார். பிரயாணம் முடியும் ஸமயம். ஜான்ஸன் இது வரை வாயே திறக்கவில்லை. ஒரு வேளை தன் நாட்டைப் பற்றிய தப்பான எண்ணம் மாறிவிட்டதோ என்ற ஆசை உள்ளூற இருந்தது பாஸ்வலுக்கு.

கடைசியாக ஒரு கிராமத்தை அடைந்தார்கள். அங்கு காணப்பட்ட ஒரு பெரிய பள்ளத்தைச் சுட்டிக் காட்டி பாஸ்வல், "இந்த இடத்தில் புராதனமான ஒரு சுவர் இருந்தது; அந்தச் சுவர் எங்கள் நாட்டைச்சேர்ந்த ஒரு அறிவாளியின்மேல் விழப்போகிறது என்று பரம்பரை யாக ஒருகதை சொல்லி வந்தார்கள்!" என்று விளக்கினார்.

**ஜான்ஸன் ;—** "இப்போது அந்தச் சுவர் எங்கே?"

**பாஸ்வல் :—** "ஸமீப காலத்தில் தான் ஏதோ ஒரு காரணத்திற்காக அரசாங்கத்தாரே அதை இடித்துத்தள்ளி விட்டார்கள்"

**ஜான்ஸன் :—** "பேஷ்! உங்கள் அரசாங்கத்திற்குத் தெரியும் அந்தச் சுவர் விழவே விழாது என்று!!"

இதைக்கேட்ட பாஸ்வலின் முகம் எப்படியிருக்கும்!

---

*ஶரீர சுத்தி சுத்தி அல்ல. கடனில்லாததே சுத்தி.*

# ஸாமர்த்யசாலி.

தியாகோபநிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

**ஒருவர்:** உங்க பிள்ளையை காலேஜில் சேர்த்துவிட்டீராமே! எப்படி இடம் கிடைத்தது?

**மற்றவர்:** காலேஜில் Philosophy (தத்வசாஸ்த்ரம்) பாடத்திற்குத்தான் இடமிருந்தது. வேறு வழியில்லை பிள்ளையை அதையே எடுத்துக்கொள்ளச் சொன்னேன். இடம் கிடைத்துவிட்டது.

**ஒ:** ஆமாம்! உமக்கும், உமது பையனுக்கும், Philosophyக்கும் வெகு தூரமாயிற்றே!

**ம:** அப்படிச் சொல்லாதேயும்! அதெல்லாம் முன்பு! உமக்குத் தெரியாதா! நானே காலையிலும் மாலையிலும் வேதாந்த பாடம் கேட்கப் போகிறேனே!

**ஒ:** பேஷ்! பேஷ்!! ஆமாம் உமக்கு வேதாந்தம் ஏதாவது புரிகிறதா?

**ம:** என்ன ஓய் அப்படிக் கேட்கிறீர்? நீரே வந்து கேட்டுப் பாரும்! எங்கள் குரு என்ன அத்புதமாக உபன்யாஸம்செய்கிறார்? ஒவ்வொன்றையும் எப்படி இனிமையாக விளக்குகிறார்? பொழுது போவதே தெரிகிறதில்லை. அது போகட்டும், உம்மைப் பார்த்தேனே இப்போது! அவசரமாக ஒருவீசை காப்பிக்கொட்டை வாங்கிக் கொடுப்பீரா? எங்கள் குரு சொல்லியனுப்பினார். ரொம்ப சிரமமாக இருக்கிறதாம். என்னையே நம்பியிருக்கிறாராம்!

**ஒ:** அவர் உம்மை நம்பியிருக்கிறார். நீர் என்னை நம்புகிறீர். உங்களிருவரையும் வேதாந்தம் நம்பியிருக்கிறதாகத் தெரியவில்லை.

**ம:** வேதாந்தம் என்றால் என்ன என்பது இருக்கட்டும். நமக்கு அவசியமா? அவசியமில்லையா? என்பதுபற்றியும் பேச்சு வேண்டாம். ஒன்று சொல்லுகிறேன். நாம் எண்ணியபடி சில கார்யங்கள் நடக்காதபோது, வேதாந்தம் தெரிந்துகொண்டால் கொஞ்சம் ஆறுதலாக இருக்கிறது!

**ஒ:** தன்னம்பிக்கை யில்லாதவன்தான் வேதாந்தம், வேதாந்தம் என்பான்! சோம்பேறியாக உம்மை ஆக்கிக்கொள்வது தவறு இல்லையா?

இந்த சம்பாஷணை முழுதும் கற்பனையல்ல. இதில் கருத்தும் சிறிது காணக்கிடக்கிறது. இது தருணம் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீழ்க்கண்ட கீர்த்தனம் கருத்தில் பதிந்தது.

---

**சட்டம் இடமளித்தாலும் வாங்கியதைத் தந்துவிடு.**

---

ராகம்—வர்த்தனி] பல்லவி. [தாளம்—ரூபகம்

மனஸா மன ஸாமர்த்ய மேமி ஓ (ம)

அநுபல்லவி.

வினு ஸாகேத ராஜு விச்வமனே ரதமுனெக்கி
தன ஸாமர்த்யமுசே தானே நடிபிஞ் செனே (ம)

சரணம்.

அலநாடு வஸிஷ்டாதுலு பட்டமு கட்டெடு பலு
குலவினி வேகமே பூஷணமுல னொஸகின கைகனு
பலுமாறு ஜகம்புலு கல்லலனின ரவி ஜுனி மாய
வலவேஸி த்யாக ராஜ வரதுடு தா ஜனக லேதா— (ம)

பொருள்:—

பல்: ஓ மனமே! நம்முடைய திறமை என்னவாகும்?

அநு: (மனமே) கேள்! ஸாகேத ராஜனை ஸ்ரீ ராமச் சந்த்ரமூர்த்தி அகில உலகமெனும் ரதத்திலேறித் தன்னுடைய ஸாமர்த்யத்தால் தானே செலுத்தினர் (அன்றோ!)

சர: அன்று ஒருநாள் வஸிஷ்டர் முதலியவர்கள் ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யத் தீர்மானித்ததை (மந்தரை என்ற கூனியின்) வார்த்தையால் கேட்டு, உடனே (மகிழ்ச்சி பொங்க) திவ்ய முத்துமாலையைக் கொடுத்த கைகேயீ (பிறகு என்னவானுள்)? பலவிதமாக உலகம் பொய் என்று பேசின சுக்ரீவன் (பிறகு என்ன ஆனுன்)? இவர்களை, ஸ்ரீ ராமா! உம்முடைய மாய வலை வீசி அவர்கள் சொன்னதற்கு முற்றிலும் மாருனவகையில் நடத்திவிட்டீரல்லவா? இந்த தியாகராஜனுக்கு உம்முடைய அநுக்ரஹம் எப்பொழுதுமிருக்கிறது (அதனுல், ஏ மனமே! நீ அடங்கிக்கிட, உன் ஸாமர்த்யம் என்ன செய்யும்)?

கருத்து:— ஸர்வேச்வரனுக்கு இந்த அகில ப்ரபஞ்சமும் ரதம்போல; அதில் ஸாரதியாக அவரே அமர்ந்திருக்கிருர். அனைவருடைய புத்தி, மனம், சித்தம் என்ற கடிவாளங்களைப் பிடித்து, காலம் எனும் குதிரைகளைத் தன் வழி செலுத்துகிருர்.

அந்த ஸர்வேச்வரனே ஸ்ரீ ராமன். அவரே இந்த தேகமெனும் ரதத்தில் வீற்றிருக்கிருர். என் புத்தி சித்தத்தை அடக்கி ஆண்டு, செலுத்துபவர் அவரே! நானல்ல!

கைகேயீ ஸ்ரீ ராமன் முடி சூடுவான் என்று கேட்டு பெரு மகிழ்ச்சி அடைந்தாள். அடுத்த நிமிஷம் பெரும்

---

கோபம் கொண்டு ராமனை வனம்புகச் செய்தாள். இது ஈஶ்வர ஸங்கல்பம் என்றனர்.

வாலி வதம் அடைந்து விழுந்ததைக்கண்டு பொருமல் ஸுக்ரீவன் துக்கித்து ப்ரலாபித்தான். ''தமையனைக் கொன்றேன், நான் பாவி! எனக்கு உலகில் எதுவுமில்லை! உலகமே அநித்யம்!'' என்றெல்லாம் சில வேதாந்த மொழிகள் பேசினன். அதன்படி நடந்தானு? அடுத்த நாளே கிஷ்கிந்தைக்குச் சென்று, முடிசூட்டிக்கொண்டு, தன் இரு மனைவிகளுடன் சிற்றின்பத்தில் மூழ்கிக் கிடந்தான். இதை ஈச்வர மாயை என்றனர்.

ஶ்ரீ ராமா! உலகத்தில் நீர் ஒருவர்தான் ஸாமர்த்திய சாலி! உம்மைப்போல் எங்களால் திறமையுடன் ஸுக துக்கங்களைத் தாண்ட முடியாது! நீரே ஈச்வரன் என்பதால் அது உம்மால் முடிந்தது. நீரே ஆள்கிறவர். நாங்கள் ஆளப்பட வேண்டியவர்கள்.

உம் ஸங்கல்பம் எதுவோ அதை யாரும் அறிய முடியாது! என் திறமை என்று நான் தனியாக நினைத்துக்கொண்டால் அது வீண் பேச்சு! எனக்குள்ள சொற்ப சக்திகளை உம் அடியில் ஸமர்ப்பித்துவிட்டு, உம்வசமாக என்னை எப்பொழுதும் நினைத்து, உலக காரியங்களைச் செய்துகொண்டு போகிறேன். இனி எனக்கு என்னைப் பற்றி கவலையில்லை. வரதனுக இருந்து, என்னுடைய பயத்தைப் போக்கி, நல்வழியில் செலுத்திவிடுவீரல்லவா?

---

## ஶ்ரீ பைரவ அஷ்டோத்தர மூலச்லோகம்.

[கக்குவான் இருமல் என்ற தொத்துநோய் குழந்தைகளை மிகக் கஷ்டப்படுத்தும்போது இதைப் பாராயணம் செய்தால் அநுகூலமாகும். (பைரவாஷ்டமீ அன்று இதைப்பாராயணம் செய்தால் விசேஷம்) பைரவருக்கு வடமாலை சாத்தலாம்.]

த்யானம் :- रक्तज्वाल जटाधरं सुविमलं रक्ताङ्ग तेजोमयम् ।
धृत्वा शूलकपाल पाश डमरून् लोकस्य रक्षाकरम् ।
निर्वाणं शुनवाहनं त्रिणयनं आनन्त कोलाहलं ।
वन्दे सर्व पिशाच नाथ वटुकं क्षेत्रस्य पालं शिवम्॥

ரக்தஜ்வால ஜடாதரம் ஸுவிமலம் ரக்தாங்க தேஜோமயம்
த்ருத்வாஶூல கபாலபாஶ டமரூன் லோகஸ்ய ரக்ஷாகரம்
நிர்வாணம் ஶுனவாஹனம் த்ரிணயனம் ஆனந்தகோலாஹலம்
வந்தே ஸர்வ பிஶாச நாத வடுகம் க்ஷேத்ரஸ்ய பாலம் ஶிவம் ॥

---

கடன் பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினன்

[சிவந்தஜடை, நிர்மலமான உடல், சிவந்ததேஜஸ், சூலம், கபாலம், உடுக்கை ஆகியவைகளைத் தரித்து, உலகைக்காப்பவரும் வஸ்த்ரமின்றி நாயை வாஹனமாகக் கொண்டு முக்கண்ணனாய், ஆனந்த வடிவனாய் பூதப்ரேத நாதனாய் க்ஷேத்ரங்களை ரக்ஷிப்பவராயுமுள்ள பைரவரை நமஸ்கரிக்கிறேன்.]

1 भैरवो भूतनाथश्च – भूतात्मा भूत भावनः ।
क्षेत्रदः क्षेत्रपालश्च – क्षेत्रज्ञः क्षत्रियो विराट् ॥
பைரவோ பூதநாதஶ்ச - பூ[4]தாத்மா பூதபாவன: ।
க்ஷேத்ரத: க்ஷேத்ரபாலஶ்ச-க்ஷேத்ரக்ஞ: க்ஷத்ரியோ விராட்

2 स्मशानवासी मांसाशी – सर्पराशिः स्मरान्तकृत् ।
रक्तपः पानपः सिद्धः – सिद्धिदः सिद्ध सेवितः ॥
ஸ்மஶாநவாஸீ மாம்ஸாஶீ-ஸர்ப்பராஶி: ஸ்மராந்தக்ருத் ।
ரக்தப: பாநப: ஸித்த: - ஸித்தித: ஸித்த ஸேவித: ॥

3 कंकालः कालशमनः – कलाकाष्टा तनुः कविः ।
त्रिनेत्रो बहुनेत्रश्च – तथा पिंगल लोचनः ॥
கங்கால: காலஶமந: – கலாகாஷ்டா தநு: கவி: ।
த்ரிநேத்ரோ பஹுநேத்ரஶ்ச - ததா பிங்கலலோசந: ॥

4 शूलपाणिः खड्गपाणिः – कंकाली धूम्रलोचनः ।
अभीरुर्भैरवो नाथो – भूतपो योगिनीपतिः ॥
ஶூலபாணி: கட்கபாணி:-கங்காளீ தூம்ரலோசந: ।
அபீருர்பைரவோ நாதோ - பூதபோ யோகிநீ பதி: ॥

5 धनदो धनहारी च – धनवान्प्रीति भावनः ।
नागहारो नागपाशो – व्योमकेशः कपालभृत् ॥
தநதோ தநஹாரீச - தநவாந் ப்ரீதி பாவந: ।
நாகஹாரோ நாகபாஶோ - வ்யோமகேஶ: கபாலப்ருத்

6 कालः कपालमाली च – कमनीयः कलानिधिः ।
त्रिलोचनो ज्वलन्नेत्रः – त्रिशिखीच त्रिलोकपः ॥
கால: கபாலமாலீச - கமநீய: கலாநிதி: ।
த்ரிலோசநோ ஜ்ஜ்வலந்நேத்ர:-த்ரிஶிகீச த்ரிலோகப: ॥

7 त्रिनेत्र तनयो डिंभः – शांतः शांतजन प्रियः ।
बटुको बटुवेषश्च – खट्वांग वरधारकः ॥

---

இலங்கை வேந்தன் என ஒரு கவி கூறுகிறார்.

த்ரிநேத்ர தநயோ டிம்ப: - ஶாந்த: ஶாந்தஜநப்ரிய: ।
வடுகோ வடுவேஷஶ்ச – கட்வாங்க வரதாரக: ॥

8 भूताध्यक्षःपशुपतिः – भिक्षुकः परिचारकः ।
धूर्तो दिगम्बरः शूरो – हरिणः पाण्डुलोचनः ॥

பூதாத்யக்ஷ: பஶுபதி: - பிக்ஷுக: பரிசாரக: ।
தூர்தோ திகம்பர: ஶூரோ - ஹரிண: பாண்டுலோசந:

9 प्रशान्तः शान्तिदः सिद्धः – शंकरः प्रियबान्धवः ।
अष्टमूर्तिर्निधीशश्च –ज्ञानचक्षुस्तपोमयः ॥

ப்ரஶாந்த: ஶாந்தித: ஸித்த: - ஶங்கர: ப்ரியபாந்தவ:
அஷ்டமூர்த்திர் நிதீஶஶ்ச - ஞானசக்ஷுஸ் தபோமய: ॥

10 अष्टाधारः षडाधारः – सर्पयुक्तः शिखीसखः ।
भूधरो भूतराधीशः – भूपति र्भूधरात्मजः ॥

அஷ்டாதார: ஷடாதார: - ஸர்பயுக்த: ஶிகீஸக: ।
பூதரோ பூதராதீஶ: - பூபதிர் பூதராத்மஜ: ॥

11 कङ्कालधारी मुंडीच – नागयज्ञोप वीतवान् ।
जृम्भणो मोहनः स्तंभी – मारणः क्षोपणस्तथा ॥

கங்காலதாரீ முண்டீச - நாக யக்ஞோபவீதவாந் ।
ஜ்ரும்பணோ மோஹந: ஸ்தம்பீ-மாரண: க்ஷோபணஸ்ததா

12 शुद्धनीलांजनः प्रख्यः – दैत्यहा मुंडभूषितः ।
बलिभुग्बलि भुग्नाथो – बालोऽबाल पराक्रमः ॥

ஶுத்த நீலாஞ்ஜந ப்ரக்ய: - தைத்யஹா முண்டபூஷித:
பலிபுக்பலி புக்நாதோ - பாலோऽபால பராக்ரம: ॥

13 सर्वापत्तारणो दुर्गो – दुष्टभूत निषेवितः ।
कामी कलानिधिः कांतः – कामिनी वशकृद्वशी ॥

ஸர்வாபத்தாரணோ துர்கோ - துஷ்டபூத நிஷேவித: ।
காமீ கலாநிதி: காந்த: - காமிநீ வஶக்ருத்வஶீ ॥

14 सर्वसिद्धि प्रदो वैद्यो – प्रभुर्विष्णु रितीव हि ।
अष्टोत्तरशतं नाम्नां – भैरवस्य महात्मनः ॥

ஸர்வ ஸித்திப்ரதோ வைத்யோ-ப்ரபுர்விஷ்ணு ரிதீவஹி ।
அஷ்டோத்தரஶதம் நாம்நாம்-பைரவஸ்ய மஹாத்மந: ॥

---

மாதர் பகுதி.

# குமதி ஸுமதி ஸம்வாதம்.

கௌண்டின்யன்.

கு: அம்மா ஸுமதி! உத்தியோகப் படிப்பு படிக்க வேண்டாம் என்கிறாயே வேதசாஸ்த்ர காவ்யங்களையாவது கற்பிக்க முன்னர் நமக்கென ஸ்கூல்கள் இருந்தனவா?

ஸு: ஸ்கூல் வேண்டுமா? ஒவ்வொரு வீடும் ஸ்கூல்தான். புருஷ குழந்தைகளுக்கு பாடம் கூறும்போது கேட்டுக் கொண்டிருந்தாலே ஸகல வித்யைகளும் வந்துவிடுமே?

கு: வாஸ்தவமாவா?

ஸு: 50 ஆண்டுகளுக்கு முன் மாயவரத்தில் முத்துகனபாடிகள் என ஒருவர் இருந்தார். அவரது ஸம்ஸாரம் யஜுர்வேதம் பூராவும் ஒப்பிவிப்பாள். சிஷ்யர்கள் பஞ்சாதி சொல்லும் போது தப்பெடுத்துக்காட்டி திருத்துவாள். அவளது பிள்ளைகள் இன்றும் இருக்கிறார்கள்.

கு: அப்படி காவ்ய சாஸ்த்ரம் படித்தவருண்டா?

ஸு: அதே மாயவரத்தில் காமாக்ஷி என்ற அம்மாள் வேதாந்தத்தில் ஒரு புத்தகம் கூட எழுதியிருக்கிறாள். அவள் இறந்து 20 வருஷமாயிற்று. அதேபோல் நம் ஆசிரியர் குடும்பத்தில் சுந்தரி என்றொருவள் இருந்தாள்.

கு: அதை விரிவாகச் சொல்லு, கேட்போம்.

ஸு: ஆசிரியரின் தாதா, ராம பத்ர சாஸ்திரிகள். மாயவரத்தில் வடக்கித்தி தாதா என பிரஸித்தராக இருந்தார். அவரது மூத்தபெண் சுந்தரி. அவள் புருஷன் ஒஹை சேஷகனபாடிகள். அவர் வேதமும் சாஸ்திரிகள் காவ்யமும் சொல்லி வைப்பார். இதைக்கேட்டிருந்து எழுத்துப் படிக்கத் தெரியாமலே ஸம்ஸ்கிருதத்தில் பாடம் கற்பிக்கும்படி நல்ல வ்யுத்பத்தி இருந்தது. அநேகம் பேரனுக்கு நாடகம், பாடம் சொன்னாள்.

கு: கேள்வியினாலேயே அவ்வளவு யோக்யதை உண்டானதா?

ஸு: கேள்வியினால் உண்டான மற்றொரு ஆச்சர்யத்தைக்கேள். ஷை சாஸ்த்ரிகளின் தாயார் 90 வயதிருந்தாள். அவள் உடல் ஒடுங்கி முதிர்ந்த வயதிலிருக்கும் போது கேள்வியால் பல ச்லோகங்கள் நெட்டுருவாகக் கூறுவாள். ஆனால் வ்யுத்பத்தி க்ஞானமில்லாதவள். லவங்கீ குரங்கீ த்ருக் அங்கீகரோது ஹரிஹி ஹரிஹி என்பாள்.

---

சித்தரஞ்ஜநதாஸ் கடனைக் கொடுத்தார்.

கு : அதற்கென்ன அர்த்தம்?

ஸு : ஸாதாரணமாக தேவதா ஸ்தோத்ரங்களைக் கூறிவிட்டு முடிவில் ஹரிஹி ஹரிஹி என்பார்கள். இவளுக்கு அர்த்த க்ஞானம் இல்லாததால் இதையும் ஸ்தோத்திரமென்று நினைத்துக் கூறினாள். அது ஸ்தோத்ர மில்லாததுடன் விபரீதமுமானது. அது ஒரு காதல் ச்லோகம்.

கு : அதைக் கொஞ்சம் நன்றாக விவரித்துக்கூறு.

ஸு : ஒரு முகம்மதிய அரசன் பெண் லவங்கிபாய் என்பவள் ஸம்ஸ்கிருதம் கற்க விரும்பினாள். அவளோ கோஷா. அத்துடன் புருஷ உபாத்தியாயரிடம் படிக்கச் சொன்னால் என்ன நேருமோ என அஞ்சி ஒருயுக்தி செய்தான் மன்னன்.

கு : இவ்வளவு கஷ்டமேன், ஒரு ஸ்திரீயையே ஏற்பாடு செய்யலாகாதோ?

ஸு : அரசன் அச்சமயம் மஹாபிரஸித்த பண்டிதரான ஜகன்னாத பட்டரையே குருவாக அமர்த்த ஆசைக்கொண்டான்.

கு : அதற்கு அவன் செய்த யுக்தி என்ன?

ஸு : பண்டிதர் குஷ்டரோகியைப் பார்ப்பதில்லை. லவங்கி குருடனைப் பார்ப்பதில்லை.

கு : ஆஹா! பண்டிதர் குருடனென பெண்ணிடமும் பெண் குஷ்டரோகி என பண்டிதரிடமும்கூறி நடுவில் ஒருதிரை போட்டுப் படிக்கச் சொல்லியிருப்பான் அல்லவா?

ஸு : ஆமாம். ஆனால் கெட்டிக்காரன் பொய் 8 நாளைக்குத் தான் என்பர். ஒருநாள் ஒருவரையொருவர் பார்க்க நேர்ந்தது.

கு : அதெப்படி? ஏன்பார்த்துக் கொண்டனர்?

ஸு : கவிகள் சந்த்ரோதயத்தை வர்ணிப்பது ஸஹஜமல்லவா? அப்படி அவர் உதயசந்த்ரனைப் பார்த்து வர்ணித்தார்.

கு : குருடருக்கு எப்படி சந்த்ரோதயம் தெரியும் என அவள் எட்டிப்பார்த்தாளோ?

ஸு : ஆம். உடனே அவர் இதோ ஒரு சந்த்ரன் உதயமாகிறதே என்று குஷ்டமில்லாத அவள் முகத்தைப் பார்த்துச் சுலோகம் கூறினார்.

கு : சரிதான்! வேறென்ன வேண்டும், இருவரும் ரஸிகர். ரஸம் இருமனதையும் இழுத்து ஒருமனப்படுத்தி இருக்கும். இவர் ஹிந்து. அவள் முஹம்மதிய ஸ்த்ரீ.

---

**யார் பட்ட கடன்? இன்சால்வண்டான தந்தை!**

ஸா : இதற்காகத்தான் நெருப்புக்குடமான ஸ்த்ரீயையும் நெய்குடமான புருஷனையும் சேர்த்து வைக்காதே என்பர்.

கு : அப்புறம் என்ன ஆயிற்று?

ஸா : என்ன ஆவது? அரசன் பண்டிதரைத் தூக்குப்போடும்படி உத்தரவிட்டான். அந்தத் தருவாயில் உனக்கென்ன விருப்பமென்று கேட்டு ஸாத்யமானதைப் பூர்த்திசெய்வது வழக்கம். பண்டிதரைக் கேட்க அப்போதும் பிரகாஸத்துடன் ஒரு ஸ்லோகம் அழகாகச் சொன்னார்.

நயாசே கஜாளிம் நவாவாஜிராஜம் நயாசே து கூலம் நவாரத்னஜாலம் | இயம் ஸாஸ்தநீ மஸ்தக ந்யஸ்தஹஸ்தா லவங்கீ குரங்கீ த்ருகங்கீ கரோது ||

கு : ஸம்ஸ்கிருதம் தெரியாவிட்டாலும் காதுக்கு ரஸமாக இருக்கிறது சுலோகம். இதன் கருத்தென்ன?

ஸா : உயர்ந்த யானை குதிரை பட்டு ரத்னங்களை நான் கேட்கவில்லை. மாடியில் முகத்தில் கையை வைத்துக்கொண்டு மான் கண்போன்ற நேத்ரங்களால் என்னைப் பார்க்கும் லவங்கீபாய் என்னை அங்கீகரிக்கட்டும் என்பது கருத்து.

கு : அரசன் ரஸிகனாக இருந்தால் அப்படியே அவரை விடுவித்து மணம் செய்திருப்பான்.

ஸா : ஆம். அப்படியே நடந்தது.

கு : ஆரம்பித்ததை விட்டு ஏதோதையோ வம்பு பேசிக்கொண்டிருக்கிறோமே!

ஸா : அதுதான் நமது ஸஹஜதர்மமாச்சே. பிரகிருதத்தைச்சொல்கிறேன் கேள். இந்த சுலோகத்தை மாணவர்கள் கூறுவதைக் கேட்டு வடக்கித்தி தாதாவின் அம்மா இதுவும் ஒரு புண்யசுலோகம் எனக் கூடவே ஹரிஹி என்றாள்.

கு : விஷயந் தெரிந்தபின் நமக்கே சிறிப்பு வருகிறதே! படிப்புள்ள சுந்தரி அம்மாள் சிறிக்காதிருப்பாளா ?

ஸா : பாட்டி என்றால் அலக்ஷ்யமாகும் என, அந்தக் கிழவியை அப்பா அம்மா என அழைத்து பணிவிடை செய்வர். சுந்தரி ரஹஸ்யமாக அவளிடம் இது பைத்தியக்கார சுலோகம், இதைச்சொல்லாதே என்றாள். பிள்ளையிடம், சிறு குட்டிகள் அதைச்சொல்லாதே என்கிறார்களே என்றுகேட்க வடக்கித்தி தாதா அம்மா நீ சொல்லு பாதகமில்லை. புண்யம் நம்பிக்கையால்தான் வருமென்றார்.

---

**கொடுப்பது கஷ்டம்! ஆதலால் கடனே வாங்காதே.**

ஸங்கமேச்வரன், திருச்சி.

6. பானுவாரத்தில் எண்ணை தேய்த்துக்கொள்ளக் கூடாதா?

கூடாது. ஸப்தமியுடன் கூடிய பானுவாரத்தில் தான் ஸூர்யன் அவதாரம். அது வாரங்களில் முதலாவதும் புண்யமானதுமாம். அன்று வபனமும், இரவு போஜனமும் கூட கூடாது. அன்று எண்ணை தேய்த்துக் கொண்டால் குஷ்டரோகம் வரும் என தர்மநூல் கூறுகிறது. (ஸதாசாரம் என்ற நமது நூலில் விரிவாக இதையும் மற்றதையும் காண்க. விலை 83ந. பை. தபால் சிலவுடன்)

7. சனிப்பெயர்ச்சிக்குப் பின் ஒவ்வொரு சனிக்கிழமையும் ஸஹஸ்ரநாமத்துடன் பூஜித்தோம். ரொம்பவும் செய்யக்கூடாது என சிலர் ... ... ...

நவக்ரஹங்களில் ஸூர்யனும், அவர் புத்ரர் சனியும் மிக முக்யமானவர்கள். நித்யமாகவும், காம்யமாகவும், ஒவ்வொருநாளும், சனி ஞாயிறில் விசேஷமாகவும் பூஜிக்கலாம். அதிக பூஜையால் அதிக பலனே கிடைக்கும்.

சூர்யநாராயணன், க்வாலியர்.

8. தாயைப் பெற்ற பாட்டிக்கு பெண் வயிற்றுப் பிள்ளை தௌஹித்ரன், ஸ்வீகாரம் செய்துக்கொள்ளப் படாதவன் இறந்த பின் கர்மா செய்யலாமா? அவனுக்குத் தாய் தந்தையர் இருக்கின்றனர்.

தாயின் தாய்க்குப் பிள்ளையோ, பிள்ளையின் பிள்ளையோ—பௌத்ரனோ இல்லாவிடில், பெண்வயிற்றுப் பிள்ளை—தௌஹித்ரன்தான் கர்மா செய்யவேண்டியவன். அவளது தநம் இவனைச் சேருமானால் கட்டாயம் ஸந்தேஹமின்றி தௌஹித்ரன்தான் செய்யவேண்டும். சிறியவனாக இருந்தால் அவன் கை பில்வாங்கி அவன் தந்தையோ மற்றவரோ செய்யலாம். ஸ்வீகாரம் செய்துகொண்டால் தான் செய்யவேண்டுமென்பதில்லை.

V. அய்யாசாமி, திருச்சி.

9. மூத்த ஸஹோதரிக்கு கல்யாணமாகாமல் (ஜாதகர்மா, நாமகரணாதிகள் கூட ஆகாமல்) தம்பிக்குப் பூணல் போடலாமா?

பெண்களுக்கு ஜாதகாதிகள் மந்த்ர மில்லாமல் தூஷ்ணீமாக நடக்கிறது. ஆதலால் தம்பிக்கு எட்டு வயதாகிவிட்டால் உடனே உபநயநம் செய்துவிடலாம். மூத்த பிள்ளைக்குச் செய்யாமல் தம்பிக்குச் செய்யக்கூடாது.

---

வாங்கினால் எப்பாடுபட்டாவது கடனைக் கொடு.

# ஆயுர் வேதம், (13)

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

அர்சஸ் என்ற ரோகத்தை சாதாரணமாய் மூலம் என்று கூறுவார்கள். 'அரிவத் ப்ராணுந் ச்ருணுதி' (சத்ருவைப்போல் உயிரை ஹிம்ஸிக்கிறது) என்ற காரணத்தால் அர்சஸ் என்ற பெயர் இந்த ரோகத்திற்கு வந்தது. வியாதி தோன்றும் குதஸ்தானத்தைப் பற்றி மூலம் என்கிறுர்கள். பொதுவான குறி குணங்களைக் கொண்டு உள் மூலம்-வெளி மூலம்-இரத்த மூலம் எனப் பிரிக்கலாம். சாஸ்திரப்படி அர்சஸ் ஆறுவிதம். வாத-பித்த-கபத்தாலானவை மூன்று. ஸந்நிபாதம் ஒன்று, இரத்த சம்பந்தம் ஒன்று, ஸஹஜம் என்ற வகை ஒன்று. ஆயுர்வேதப்படி, மூலரோகம், சுலபமாகக் குணப்படுத்த முடியாத மஹா ரோகங்கள் எனப்படும் எட்டினுள் ஒன்ருகக் கருதப்படுகிறது. (மற்ற ஏழு ரோகங்களாவன ? வாத வியாதி, அச்மரீ, குஷ்டம், குல்மம், உதரம், பகந்தரம், கிரஹணி என்பன).

மலாசயத்தின் குதம் என்ற கடைசிபாகத்தில் (நவீனப் பெயர்-ரேக்டம்) உள்ள மூன்று வலிகளில் (மடிப்புகள்) இக்கோளாறு உண்டாகிறது. அவை பருத்து பலவித உருவமுள்ள மாம்ஸ முளைகளாகின்றன. சில சமயம் குதத்திற்கு வெளியேயும் தோலினுல் மூடப்பட்டுத் தொங்கும் (வெளி மூலம்). இங்கு மூன்று தோஷங்கள், மாம்ஸம், மேதஸ் என்ற தாதுக்கள், சர்மம் ஆகியவைகள் கெடுதலடைந்து அபானத் துவாரத்தில் கோளாறைக் கிளப்புகிறது.

அர்சஸ்ஸுக்குப் பொதுவான காரணங்கள் எதையும் அதிகமாகவோ, செய்யாமலோ இருத்தல், அறுசுவை உண்டிகளை (இனிப்பு - புளிப்பு - உப்பு - காரம் - கசப்பு - துவர்ப்பு) ருசிக்காகவே அதிகம் சாப்பிடல்-தீக்ஷணமான மதுவையும் சூடான பதார்த்தங்களையும் உட்கொள்ளல் - சொற்ப ஆகாரம் பண்ணல் - அதிகம் பட்டினி கிடத்தல் - வெயில், காற்று, குளிர் இவைகளில் சதா சஞ்சரித்தல் - தேக உழைப்பின்மை - எப்பொழுதும் படுத்துக் கொண்டோ, உட்கார்ந்துகொண்டோ இருத்தல் போல சுக வாழ்வையே விரும்புதல் - காமம், கோபம், துயரம்,

பொறுமையின்மை, நிர்விசாரம் ஆகிய குணங்களுடன் இருத்தல் - என்பன போன்றவையாம். ஸஹஜ அர்சஸ் பிறவியிலேயே உண்டாகிறது. காரணங்களில், எந்த தோஷம் அதிகரிக்கிறதோ அந்த வகை அர்சஸும், முத் தோஷங்களும் தலைப்படின் ஸந்நிபாத அர்சஸும் உண் டாகும். மூலமுளை பித்தவகை மாதிரி இருந்து, மல பந்தத்தினாலோ, கடினமான ஆகாராதிகளாலோ நசுக்கப் படின் இரத்த அர்சஸ் உண்டாகும்.

**பூர்வ ரூபம் —** அஜீர்ணம், வயிறு சப்தித்தல், பலக் குறைவு, உடலிளைத்தல், அதிக தேக்கெறிவு, மலம் குறை தல், கிரஹணி - பாண்டு - உதரம் போன்ற ரோகங்கள் மாதிரி இருத்தல் ஆவன.

**வாதார்சஸ்ஸில் —** முளைகள் கருஞ் சிவப்பாகவும், சுஷ்கமாயும், கடினமாயுமிருக்கும். கசிவற்றது. தினவு இருக்கும். கோவைக்கனி உருவம். இடுப்பு, துடை முத லிய இடங்களில் வலிகாணும். ஜீர்ணக்கோளாறு, தலைச் சுற்றல், சுவாஸம், காஸம், மாரடைப்பு, காதிரைத்தல், மலம் சிறிதாகவும் கட்டியாகவும் நுரையுடனும் அதிக அபாந வாயுவோடு வெளிவரும். சர்மம், நகம், மலம், மூத்திரம் இவை கருநிறங்கொள்ளும். குல்மம், மஹோ தரம், பிலீகவிருத்தி முதலிய வியாதிகள் உண்டாகலாம்.

**பித்தார்சஸ்ஸில் —** முளைகள், சிவப்பு, மஞ்சள், கறுப்பு, நீலம் ஆகிய நிறமாயிருக்கும். இரத்த கசிவு உண்டாகும். முளை கிளியின் நாக்குபோல் காணும். மத்தியில் பருத்திருக்கும். ஜ்வரம்-நாவறட்சி-மூர்ச்சை- அரோசகம்-வெப்பம்-திரவமாக, மஞ்சள், கறுப்பு வர்ண மாய், இரத்தம்போல், மலம் கழியும். சர்மம், நகம், கண், வாய், மூத்திரம் இவை இலைப் பசுமை அல்லது மஞ்சள் நிறங்கொள்ளும்.

**கபாசர்ஸ்ஸில் ---** முளை வெண்மையாய் அடர்ந்து, நீண்டு, தடித்து, சூழ்ந்து பரவி இருக்கும். வலி அதிக மிராது. பிசுபிசுப்பு, தினவு கொண்டுள்ளது. பசுவின் மடிபோல் முளை காணும். துடையில் பிடிப்பு, சுவாஸம், காஸம், இருதய சலனம், பீநஸம் - பிரமேஹம் - குளிர் - ஜ்வரம் - அக்கி மாந்தியம் - வாந்தி - கபத்துடனும் வயிற் றுக் கடுப்புடனும் அதிகமாக மலம் போதல் - சர்மம் வெளிறி - ஸ்நிக்தமாயிருத்தல் - ஆகியவை காணும்.

---

# ★ கார்த்திகைமீ கோசாரப்பலன். ★

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

## மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலுமிருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்தில் இருக்கிறார். இதனால் அலேச்சல் காரியங்களில் ஈடுபடும்படியாகும். பணமுடை ஏற்பட்டுவரும். சிலபொருள் விற்கும்படி யாகும். வெளியூர் போய்வர நேரும். பிறர் உதவியை எதிர்பார்க்கும்படியாகும். சஷ்டிகவசம் பாராயணம் செய்துவர நன்மை.

## ரிஷப ராசி

க்ருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஏழிலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஸப்தமத்தில் இருக்கிறார். இதனால் தேகசுகம் சிறிது பாதித்துக் குணமாகும். குடும்ப நடப்பில் சிரமம் ஏற்படும். விவாத விஷயங்களில் கலக்கம் நேரிடும். எதிலும் திருப்தியற்ற போக்கு இருந்துவரும். தொழில் மாற்றம் சிலருக்கு உண்டாகும். அம்பாளை ஆராதிப்பதால் தீமை விலகும்.

## மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம் பாதம் முடிய

குரு ஆறிலும், சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது பத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஆறில் இருக்கிறார். புதிய முயற்சிகள் தடையாய் வரும். செய்தொழிலில் சோர்வு உண்டாகும். வரவுக்கு மிஞ்சிய செலவுகள் ஏற்படும். சிலரை நம்பி ஏமாறும்படியாகும். குடும்ப நடப்பில் சில கவலைகளும், வைத்ய வகையில் செலவுகளும் உண்டாகும். மனதிற்கு நிம்மதி குறையும். மஹாவிஷ்ணுவிற்கு அபிஷேகம் செய்யக் கவலை நீங்கிவரும்.

## கடக ராசி

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலுமிருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்தி லிருக்கிறார். உத்தியோகத்தில் நல்ல மாற்றமுண்டாகும். தைரியம் அதிகமாகும். குடும்பத்தில் அந்தரங்கமான சில கவலைகள் ஏற்படும். தன நடப்பில் சௌகர்யம் ஏற்பட்டுவரினும், உள்ளீடான கவலைகள் இருந்துவரும். வெளியூர் போய்வரும்படியாகும். பிறர் சகாயம் உண்டாகும். துர்க்கா தேவியை ஆராதித்து வருவது நன்மை.

## சிம்ம ராசி

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும், ராகு இரண்டிலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் குடும்பத்தில் விரயங்கள் அதிகமாகும். வீண்வகையிலும் செலவு ஏற்படும். பந்து விரோதம் உண்டாகும். குடும்ப சுகம் ஏற்பட்டு வரும். சுபகாரியங்களில் செலவுகள் உண்டாகும். நிம்மதியிராது. ஆதித்ய ஹிருதயம் பாராயணம் செய்ய நலம்.

## கன்னியா ராசி

உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி நான்கிலும், ராகு ஜன்மத்திலும், கேது ஏழிலுமிருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் உழைப்பு அதிகமுண்டாகும்.

---

மனச்சோர்வு ஏற்படும். குடும்பச் செலவுகள் அதிகமாகும். வரவேண்டிய பணம் தடையாகும். பெரிய மனுஷ்யர்கள் உதவியை எதிர்பார்க்கும்படியாகும். விஷ்ணு ஸஹஸ்திரநாம பாராயணம் செய்துவர நலம்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டிலும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும் கேது ஆறிலும் இருக்கிறார்கள். சூரியன் இரண்டிலிருக்கிறார். இதனால், முயற்சிகள் ஓரளவு கூடும். உத்தியோக நன்மை ஏற்படும். பிறர் சகாயம் ஏற்படும். விவாதங்களை விலக்கவேண்டும். லலிதா ஸஹஸ்திரநாம பாராயணம் செய்யவும்.

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ராசியிலும், சனி இரண்டிலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் ராசியிலிருக்கிறார். இதனால் வெளியூர் போய் வருதலும், அலைச்சல் காரியங்களில் ஈடுபடுவதும் ஏற்படும். புதியவகை முயற்சிகளுண்டாகும். தன் சொல்லே தனக்கு விரோதமாகும். சுபமுயற்சிகளும் ஏற்படும். சுப்ரமண்யருக்கு அபிஷேகம் செய்ய நன்மை.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ராசியிலும், கேது நான்கிலும், ராகு பத்திலும் இருக்கிறார்கள். சூரியன் விரயத்திலிருக்கிறார். இதனால் ராஜாங்க கவலை ஏற்பட்டு நீங்கும். தேக சுகம் சிறிது பாதிக்கும். வீண்வகையில் சில செலவுகள் உண்டாகும். எதுவும் தாமதப்பட்டு கூடிவரும். பிறர் உதவியை நாடும்படியாகும். தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்திரம் பாராயணம் செய்ய நன்மை.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்திலிருக்கிறார். இதனால் பழைய காரியங்களில் அனுகூலமுண்டாகும். விற்பனையில் லாபகரமுண்டாகும். அன்னியர் சகாயமுண்டாகும். குடும்ப நடப்பில் கவலைஏற்படும். பந்துஜன தூஷணை உண்டாகும். தொழில் மந்தம் ஏற்படும். நவக்கிரஹப்ரதக்ஷணம் செய்துவர நன்மை.

## கும்பராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு பத்திலும், சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பத்திலிருக்கிறார். இதனால் குடும்பத்தில் கலகம், தேக சுகக் குறைவு, வெளியூர் பிரயாணம், மேலோர் ஆதரவு, தெய்வ காரியங்களில் சிந்தனை, சிலர் பகை ஏற்படுதலும் உண்டாகும். காளிக்கு அபிஷேகம் செய்ய நன்மை.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு பாக்கியத்திலும், சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் பாக்கியத்திலிருக்கிறார் இதனால் வரவேண்டிய பணம் வரும். தனமுடை நீங்கும். புதிய ஏற்பாடுகள் உண்டாகும். தெய்வ வழிபாடு ஏற்படும். குடும்ப சுகம் குறையும். பழைய வருத்தம் நீங்கி வரும். பெரியோர் நேசமும் ஏற்படும். அன்னதானம் பிரதி வியாழக்கிழமை செய்தல் நன்மை.

---

**தாநம் செய்தவரே கொடுத்து வைப்பவர்.**

வேதமோதல் யாகம் செய்தல் தானம் செய்தல் தபஸ் வேத நியமம் இவைகளால் பக்தியுடன் பகவானை வேத விதிவழுவாமல் ஆராதித்து ஸந்தோஷப்படுத்த வேண்டும். ஆதலால் ஶுபதினத்தில் பந்துக்களுடன் பிராம்மணர்களைக்கொண்டு உனக்கு உபநயந கர்மாவைச் செய்ய விரும்புகிறேன் என்றார் விஷ்ணு யஶஸ். (வருங் காலம் நிகழ்காலமாகக் கூறப்படுகிறது.)

கல்கி, தந்தையே! பத்து ஸம்ஸ்காரங்கள் யாவை? பிராம்மணர்கள் எதனால் விஷ்ணுவை விதிப்படி அர்சிக் கின்றனர்? தந்தை, குழந்தாய்! பிராம்மண ஸ்த்ரீயிடம் ப்ராம்மணன் கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களை விதிப்படிசெய்து உண்டுபண்ணப்பட்டவன் பிராம்மணன். அவன் மூன்று ஸந்திகளிலும் காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். நியமத்துடன் ஸத்யம் தவறாமல் தர்மாநுஷ் டானம் செய்கிறவன் விஷ்ணுவை ஆராதிப்பதாகும். அதனால் ஸதா ஆநந்த மயனாகி ஸம்ஸாரத்தையும் தன்னை யும் ரக்ஷிப்பான்.

கல்கி. தாங்கள் கூறியபடி நடக்கும் உத்தம பிராம் மணன் மூவ்வுலகையும் காப்பான். அப்படி பகவானைத் தனது கர்மாவால் அர்ச்சிப்பது என்பது காமதேனுபோல் அவரவர் விரும்பியதைத் தருமே? அத்தகையவர் இப்பொழுது எங்கிருக்கிறார்? தந்தை, நீ கேட்பது சரி. மிக்க பலவானான கலி தர்மத்தை அழித்து பிராம்மணர் களைப் பதிதராக்கி தர்மஶீலர்கள் பாரதவர்ஷத்தில் தங்க முடியாமல் விறட்டவே மற்ற வர்ஷங்களுக்குச் சென்று விட்டார்கள். ஸ்வல்ப தபஸ் உள்ள பிராம்மணர்கள் கலியில் அகப்பட்டுக்கொண்டு அதர்மத்தி லீடுபட்டு ஸத் கர்மாக்களை விட்டு உண்பதும் சிற்றின்பத்தி லீடுபடுவது மாக இருக்கிறார்கள். இந்த கோரமான கலியிலே பாபத்திலீடுபட்டு துராசாரமுள்ளவர்களாகவும் தேஜஸ் இல்லாதவர்களாகவும் தன்னையும் மனைவி மக்களையும் காக்க வழியின்றி நான்காம் வருணத்தவர்க்கு ஸேவை செய்வார்கள். என்று தந்தை கூறிய சொற்களைக் கேட்டு கல்கி, கலியின் கோலாஹலத்தை அடக்கக் கருதி தக்க ஸமயத்தில் உபநயநம் செய்துகொண்டு குருகுல வாஸம் செய்ய ஏற்றுக்கொண்டார்.

பந்துக்களும் பிராம்மணோத்தமர்களும் கூடி விதிப் படி கல்கிக்கு உபநயந ஸம்ஸ்காரத்தைச் செய்-

வைத்தார்கள். மஹர்ஷிகளனைவரும் வந்திருந்து வாழ்த்தி அதிமேதை வாய்ந்த இப் பாலகனுக்குப் பரசுராமரிஷியே வேத ஶாஸ்த்ரங்களையும் வில்வித்யையும் கற்பிப்பதற் கேற்ற குரு ஆவர். ஆதலால் அவரிடமே இவரை அநுப்ப வேண்டுமெனக் கூறினர். விஷ்ணுயஶஸ் அங்ஙனமே மஹேந்த்ர மலையில் வஸிக்கும் ஜமதக்நி குமாரரும் சிரஞ்ஜீவியாயுமுள்ள பரசுராமரிடம் குருகுல வாஸம் செய்யும்படி கல்கியை அனுப்பினர்.

## மூன்றும் அத்யாயம்.

பகவான் தனக்குச் சிஷ்யனாக வந்ததைக் கண்டு அளவிலா மகிழ்ச்சிகொண்டார். பரசுராமர், குரு பரம்பரையைக் கற்பிக்கத், தனது தந்தை விருத்தாந்தத்தையும் அவரை அவமதித்த க்ஷத்ரிய வகுப்பை இருபத்தோரு தலைமுறை வேருடன் அறுக்கத் தான் தவம்செய்து பரமஶிவனிடமிருந்து ஸகல அஸ்த்ர ஶஸ்த்ர வித்யைகளுடன் பரசுவையும் பெற்றதையும், க்ஷத்ரிய வதம்செய்து ஸகல பூமியையும் கச்யபருக்குத் தாநம் செய்து தான் மஹேந்த்ரமலைக்கு வந்ததையும் கூறி, வேதம் ஶஸ்த்ரம் சாஸ்த்ரம் அனைத்தையும் கற்பிக்கிறேன் என்றார்.

இங்ஙனம் பரசுராமருடைய சொல்லைக் கேட்டு புளகாங்கிதத்துடன் பேரானந்தம் அடைந்த பகவான் கல்கி அவரை நமஸ்கரித்து பணிவிடை செய்து நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் அறுபத்து நான்கு கலைகளையும் தனுர் வேதம் முதலியவைகளையும் நன்கு கற்றுக்கொண்டார். இவரது பக்தியையும் பணிவிடையையும் கண்டு பரசுராமர் பரமசந்தோஷமடைந்தார். கல்வி கற்றபின் விதிப்படி குருவை வணங்கி, தங்களுக்கு ப்ரியமான தக்ஷிணை யான் என்ன தரவேண்டும்? குரு தக்ஷிணை கொடுத்தால்தான் ஸர்வஸித்தியும் தேவர்களது திருப்தியும் ஏற்படும் அல்லவா? என்றார். அதைக்கேட்ட பரசுராமர் வத்ஸ! கலியின் தோஷத்தை அகற்றவேண்டுமென்று முன்னம் பிரஹ்மா தங்களை வேண்ட மஹாவிஷ்ணுவான தாங்கள் ஶம்பல நகரத்திலே அவதரித்தீர்.

என்னிடமிருந்து வித்தையும் சிவனிடமிருந்து அஸ்த்ரங்களையும் வேதமயமான கிளியையும் பெற்று சிம்ஹலத்திலுள்ள "பத்மா" என்பவளை மணந்து தர்மத்தை ஸ்தாபிக்கப் போகின்றீர். பிறகு திக்விஜயத்திற்குக்

கிளம்பி கலிக்குப் பிரியமானவர்களும் தர்மத்ரோகிகளுமான அரசர்களையும் பௌத்தர்களையும் சிக்ஷித்து தேவாபி மரு என்ற இரு அரசர்களை அவனியில் அரசர்களாக நியமிக்கப் போகின்றீர். நீர் செய்யப்போகும் இந்த நல்ல கர்மாக்களால் நான் பரம ஸந்தோஷமடைகிறேன். இனி யக்ஞம், தானம், தபஸ் முதலிய நற்கர்மாக்களைச் செய்யலாம். இதே நீ யளித்த தக்ஷிணையாகக் கருதுகிறேன் என்று கூறி அருகிலுள்ள பில்வோதகேஶ்வரம் என்ற க்ஷேத்ரத்திற்கு அனுப்பினார். கல்கி அங்ஙனமே ஆசார்யரை வணங்கி அந்த க்ஷேத்ரம் சென்று பரமசிவனை நமஸ்கரித்து பூஜித்து த்யானம் செய்து ஸ்தோத்ரம் செய்தார். சாந்தமாய் இருப்பவரும் விரைவில் ஸந்தோஷமடைபவருமான பகவானை சில ஶ்லோகங்களால் ஸ்தோத்ரம் செய்தார்.

गौरीनाथं विश्वनाथं शरण्यं भूतावासं वासुकी कण्ठभूषम् ।
त्र्यक्षं पञ्चास्यादि देवं पुराणं वन्दे सान्द्रानन्द सन्दोहदक्षम् ॥

योगादीशं कामनाशं करालं गङ्गासङ्ग क्लिन्नमूर्धानमीशम् ।
जटाजूटाटोपरि क्षिप्तभावं महाकालं चन्द्रफालं नमामि ॥

श्मशानस्थं भूतवेतालसंगं नानाशस्त्रैः खड्गशूलादिभिश्च ।
व्यग्रात्युग्राबाहवो लोकनाशेचस्य क्रोधोद्भूत लोकोऽस्तमेति ॥

यो भूतादिः पञ्चभूतैः सिसृक्षुस्तन्मात्रात्मा काल कर्म स्वभावैः ।
प्रहृत्येदं प्राप्य जीवत्वमीशो ब्रह्मानन्दो रमते तं नमामि ॥

स्थितौ विष्णुः सर्वजिष्णुस्सुरात्मा
लोकान्साधून् धर्मसेतून् बिभर्ति ।
ब्रह्माद्यंशे योऽभिमानी गुणात्मा
शब्दाद्यङ्गैः तं परेशं नमामि ॥

यस्याज्ञया वायवो वान्ति लोके, ज्वलत्यग्निः सविता याति तप्यन् ।
शीतांशुः खे तारकैः सग्रहैश्च, प्रवर्तते तं परेशं प्रपद्ये

கௌரீ நாதம் விஶ்வநாதம் ஶரண்யம் பூதாவாஸம் வாஸுகீ கண்ட பூஷம் । த்ரயக்ஷம் பஞ்சாஸ்யாதி தேவம் புராணம் வந்தே ஸாந்த்ரானந்த ஸந்தோஹ தக்ஷம் ॥

யோகாதீஶம் காம நாஶம் கராலம் கங்கா ஸங்க க்லின்ன மூர்த்தான மீஶம் । ஜடா ஜூடாடோபரிக்ஷிப்த பாவம் மஹாகாலம் சந்த்ர பாலம் நமாமி ॥

ஶ்மஶானஸ்தம் பூத வேதாள ஸங்கம் நாநாஶஸ்த்ரை: கட்க ஶூலாதிபிஶ்ச । வ்யக்ராத்யு க்ராபாஹவோ லோக நாஶேசயஸ்ய க்ரோதோத் தூதலோகோஸ்தமேதி ॥

யோபூதாதி: பஞ்சபூதை: ஸிஸ்ருக்ஷு: தன்மாத்ராத்மா காலகர்மஸ்வபாவை: । ப்ரஹ்ருத்யேதம் ப்ராப்ய ஜீவத்வ மீஶோ ப்ரஹ்மா னந்தோ ரமதேதம் நமாமி ॥

ஸ்திதௌ விஷ்ணு: ஸர்வஜிஷ்ணு: ஸுராத்மா
லோகான் ஸாதூன் தர்மஸேதூன் பிபர்தி ।
ப்ரஹ்மாத்யம்ஶோயோऽபிமானீ குணாத்மா
ஶப்தாத் யங்கைஸ்தம் பரேஶம் நமாமி ॥

யஸ்யாக்ஞயா வாயவோ வாந்தி லோகே
ஜ்வலத் யக்னி: ஸவிதாயாதி தப்யன் ।
ஶீதாம்ஶு: கே தாரகை: ஸக்ரஹைஶ்ச
ப்ரவர்ததேதம் பரேஶம் ப்ரபத்யே ॥

*ஶ்லோகத்தின் கருத்து:*—கௌரீபதியும் எல்லா உலகங்களுக்குத் தலைவனும் சரண மளிப்பவனும் ஸமஸ்த பூதங்களுக்கு மிருப்பிடமானவனும் வாஸுகியை மாலையாகத் தரிப்பவனும் முக்கண்ணனும் ஆதி தேவனும் பழைமையானவரும் பேரானந்த வடிவனும் யோகீஶ்வரனும் காமனை எரித்தவரும் கங்காதரனும் ஜடாஜூடையுள்ளவனும் சந்த்ரசூடனும் ஶ்மஶானத்திலு மிருப்பவனும் பூத வேதாளங்களுடன் கூடியவனுமான சிவனை நமஸ்கரிக்கிறேன். பலவகை ஆயுதங்களோடு கூடிய இவரது கைகளும் கோபமும் உலகங்களை யழிக்கும். பூதங்களுக்கு ஆதியாய் இருந்து காலம், கர்மா, ஸ்வபாவம் இவைகளுக் கேற்ற வண்ணம் உலகத்தைப் படைத்து தானே ஜீவனாகி தன்னிடமே சேர்த்துக்கொள்ளும் ப்ரஹ்மானந்த வடிவனுமான சிவனை நமஸ்கரிக்கிறேன்.

உலக பரிபாலன காலத்தில் ஜயஶீலனான விஷ்ணுவாக இருந்து உலகையும் ஸாதுக்களையும் தர்மத்தையும் ரக்ஷிக்கும் சிவனை நமஸ்கரிக்கிறேன். தனது அம்சத்தினாலும் குணத்தினாலும் பிரஹ்மாதி தேவனாய் இருப்பவனும் சப்தஸ்வரூபமே அங்கமாய் உள்ள பரமசிவனை

நமஸ்கரிக்கிறேன். அவருடைய ஆணையால் வாயு வீசுகிறது. அக்னி, சூர்யன், சந்திரன், நக்ஷத்ரம் முதலியவைகள் தம்தம் வேலையைச் செய்கின்றன. அந்த ஈசனை நமஸ்கரிக்கிறேன், எவருடைய ஆணையால் பூமி எல்லாவற்றையும் தரிக்கின்றதோ, மேகம் வர்ஷிக்கின்றதோ, காலன் ஒடுக்குகின்ருனே, மேருமலை உலகை பரிக்கின்றதோ அந்த விச்வரூபனுன பரமசிவனை வணங்குகிறேன்.

இங்ஙனம் கல்கியினுல் ஸ்தோத்ரம் செய்யப்பட்டவராய் பார்வதியுடன் ப்ரஸன்னராகி புன்னகையுடன் கல்கியின் உடலைத் தன் கையால் தடவி உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். உன்னுல் துதிக்கப்பட்ட ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்களுக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் ஸகல நன்மைகளும் உண்டாகும். வித்யை வேண்டுவோர் வித்யையும் பொருளை வேண்டுவோர் பொருளையும் அறத்தை வேண்டுவோர் அறத்தையும் முக்தியை வேண்டுவோர் முக்தியையும் பெறுவர். இஷ்டமான உருவை எடுக்கக்கூடிய, இஷ்டமான விடம் செல்லக்கூடிய இந்த காருட அஶ்வத்தையும் எல்லாம் அறிந்த வேதமயமான கிளியையும் என்னிடமிருந்து பெற்றுக்கொள். ஸர்வ சாஸ்திரங்களையும் எல்லா அஸ்த்ரங்களையும் அறிந்தவனுகவும் ஸர்வ ஶாஸ்த்ரங்களின் அர்த்தத்தை அறிந்தவனுகவும் ஸர்வ துஷ்டர்களையும் ஜயிப்பவனுகவுமுள்ள உன்னை எல்லோரும் கொண்டாடப் போகின்ருர்கள். அன்றியும் பூபாரத்தைக் குறைக்கக் கூடியதும் ரத்னமயமான பிடியுள்ளதும் நிறைந்த தேஜஸ் உள்ளதும் மிகக் கூர்மையாகவுமுள்ள இந்த கத்தியை ஏற்றுக்கொள் என்று பரமசிவன் கூறி அவைகளைத் தந்தார். பகவான் கல்கியும் மகேஶ்வரனை நமஸ்கரித்து அந்த அஶ்வத்தின் மீது அமர்ந்து "ஶம்பல" க்ராமத்திற்குத் திரும்பினுர்.

தாய் தந்தையையும் ஸஹோதரர்களையும் விதிப்படி நமஸ்காரம் செய்து பரசுராமர் கூறியதை எல்லாம் அவர்களிடம் வர்ணித்தார். சிவன் வரமளித்ததையும் அவர் கூறிய சுபமான சொற்களையும் பந்துக்களிடம் மிக்க மகிழ்ச்சியுடன் கூறினுர். கார்க்யர் பர்க்யர் விஶாலர் ஆகியவர்களும் அதைக்கேட்டு பேரானந்தம் அடைந்தனர். ஶம்பள கிராமவாசிகள் அனைவரும் ஒருவருக்கொருவர் இக்கதையைக் கூறி ஆனந்தம் அடைந்தனர்.

விஶாகயூபன் எனும் அரசன் அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு கலியை ஒடுக்குவதற்காக மஹாவிஷ்ணு அவதரித்திருக்கிறார் என்று எண்ணினன். மாஹிஷ்மதி எனும் தனது நகரத்தில் ப்ராம்மண க்ஷத்ரிய வைஶ்ய நான்காம் வர்ணத்தவர்கள் அவரவர்களுக்கு ஏற்றவண்ணம் யாகம் தானம் தபஸ் வ்ரதம் முதலியவைகளை நன்கு அநுஷ்டித்து வருவதைக்கண்டு பகவானுடைய அவதாரத்தின் மகிமை இது என உணர்ந்து தானும் தர்மஶீலனாக ஆனான்.

இதுவரை அதர்மத்திலும் அநாசாரத்திலும் ஈடுபட்டு ஸ்வதர்மத்தை விட்டு இருந்த ஜனங்கள் தர்மகார்யத்தில் ஈடுபடுவதைக் கண்டு கோபம், லோபம், அந்ருதம் முதலியவைகள் பரம துக்கத்துடன் அந்த தேசத்தை விட்டு அகன்றன. பகவான் கல்கி அக்குதிரைமீது ஏறி கவசம் பூண்டு ஆயுதங்களுடன் ஊரைவிட்டுக் கிளம்பினார். அதையறிந்த விசாகயூப அரசன் அவரைத் தர்சிப்பதற்கு விரைந்து வந்தான். கவி, ப்ராக்ஞன், சுமந்து என்பவர்களை முன்னிட்டுக்கொண்டு ஸஹோதரர்களும், க்ஞாதிகளும் சூழ நக்ஷத்ரங்களின் நடுவே சந்திரன் ப்ரகாசிப்பது போலவும் உச்சைஶ்ரவஸ் என்ற குதிரை மீது ஏறி அமராதிபன் வருவதுபோலும் விளங்கினார். விஶாகயூபன் அவரை நமஸ்கரித்து ஆனந்தப் பரவசனாகி சிறந்த பக்தனானான். கல்கி அரசனுக்கு முன்னர் கூறப்பட்ட வர்ணாச்ரம தர்மங்களைச் சுருக்கமாக உபதேசித்தார்.

என்னுடைய அம்சத்தினால் சிலர் தோன்றியதாலும் நான் அவதரித்ததாலும் விரைவில் கலி மறைவான்! அரசே! நீ இராஜஸூயம், அஶ்வமேதம் முதலிய யாகங்களால் என்னை ஆராதி! நானே சிறந்த யோகம்! தர்மம். கால ஸ்வபாவம் ஸம்ஸ்காரம் முதலியன எனது கர்மகதியை அனுஸரித்து இருக்கின்றன. சந்த்ர குலத்தில் தோன்றிய தேவாபியையும் சூர்யகுலத்திலுதித்த மரு என்பவனையும் பூமியில் அரசர்களாகஸ்தாபித்து க்ருதயுக தர்மத்தை ஆரம்பித்துவிட்டு நான் என்னிடம் செல்வேன் என்றார். இதைக்கேட்ட அரசன், ப்ரபுவை நமஸ்கரித்து வைஷ்ணவ தர்மங்களை விரிவாகக் கூறவேண்டும் என வேண்டினார். கலியை அழிப்பதற்காக அவதரித்த பகவான் தனது பரிஷத் கணங்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணிக்கொண்டு மிக அழகாக ஸத்தர்மங்களைக் கூறினார்.

## நான்காம் அத்யாயம்.

உலகைப் படைக்கும் ப்ரஹ்மாவும் உடலைவிட்டு ப்ரளய காலத்தில் ஸகல ப்ராணிகளுடனும் என்னிடம் வந்துசேர்வார். உலகமெலாம் உறங்கி இரண்டாவது பொருள் இல்லாதபொழுது நான் உலகை ஸ்ருஷ்டிக்க விரும்பினேன். என்னிடமிருந்து விராட்புருஷன் தோன்றினான். அவன் ஆயிரம் தலையும் பலகண்களும் பல பாதங்களும் உள்ளவன். அவரது அவயவத்திலிருந்து சதுர்முகன் தோன்றி வேதங்களை உச்சரித்துக்கொண்டிருந்தார். என்னுடைய அம்சமாதலால் ஸர்வக்ஞனை அவர் எனது மாயா சக்தியைக்கொண்டு தேவர், மனு, ப்ரஜாபதி முதலிய ஸகல ஜீவராசிகளையும் படைத்தார். என்னுடைய அம்ஶமானதாலும் என் மாயையால் படைக்கப்பட்டதாலும் என்னிடமே லயமாவதாலும் எல்லா உலகமும் என் உடலே ஆகும். நானே ஸகல வஸ்துக்களிடமும் ஆத்மாவாக இருக்கிறேன்,

யக்ஞம், அத்யயனம், ஸத்கர்மா முதலியவைகள் உலகில் என்னை (என் ஸ்வரூபத்தை) விளக்குகின்றன. தபஸ் தானம் முதலிய ஸத்கர்மா என்னையே ஸேவித்து என்னைப் போற்றுகின்றது. இவைகள் என்னையே நினைத்து ஸந்தோஷப்படுத்துகின்றன. அப்படி வேறு எந்த தேவதைகளும் என்னை சந்தோஷப்படுத்துவதில்லை. வேதத்தைக் கூறுபவர் பிராம்மணர்கள். வேதம் எனது சிறந்த உடல். பிராம்மணர்கள் அந்த வேதத்தினாலும் சிறந்த கர்மாக்களாலும் முவ்வுலகத்தையும் போஷிக்கிறார்கள். உலகெலாம் எனது உடல். அதை ரக்ஷிப்பதில் பிராம்மணரே சிறந்தவராவர். அதனால் சுத்த ஸத்வ குணங்களுக்கு இருப்பிடமான நான் அந்த ப்ராஹ்மணர்களை நமஸ்கரிக்கிறேன். உலகவடிவமான என்னை எல்லோரும் ஆஶ்ரயிக்கிறார்கள்.

**விஶாகயூபன்** :– பகவன் ! பிராம்மணன் என்பதற்கு என்ன லக்ஷணம்? உம்மிடம் பக்தி செலுத்துவது எப்படி? பக்தியினாலும் உமது அனுக்ரஹத்தினாலும் பிராம்மணர்களின் வாக்கே பாணம்போலிருக்கின்றதல்லவா? எனக் கேழ்க்க **கல்கி** கூறினார்:– அரசே! வேதங்கள் என்னை ஈச்வரன் என்றும் அவ்யக்தரான பரமாத்மா என்றும் வ்யக்தனை புருஷன் என்றும் கூறுகின்றன. பல தர்மங்களைக் கூறும் வேதம் பிராம்மணர்கள் மூலமாக ப்ரகாசம்

ஆகின்றது. "பிராம்மணர்களுடைய சிறந்த தர்மமே பூர்ண பக்தி யாகும்." அதனால் ஸந்தோஷமடைந்த நான் அந்த தர்மத்தைக் காக்க ஒவ்வொரு யுகத்திலும் பல உருவங்களோடு அவதாரம் செய்கிறேன்.

ஸுமங்கலிகளால் நூற்கப்பட்டு மூன்றாக மடித்து சேர்க்கப்பட்ட மூன்று இழைகள் நிறைந்த நூல் யக்ஞோபவீதம் என்று கூறப்படுகிறது. வேத மந்த்ரத்தைக் கூறி முருக்கி பிரும்மமுடி போட்டதும் கழுத்திலிருந்து நாபி நடுவரைத் தொங்கக்கூடியதும் பிரும்ம ஸூத்ரம் அல்லது யக்ஞோபவீதம் எனப்படும். அது தேவ பித்ரு மநுஷ்ய கர்மாக்களைச் செய்ய மூதல் ஸாதநம். த்ரயீ என்றால் வேதம். ரிக் யஜுஸ் ஸாம என்ற மூன்று வேதம் போல் முப்பிரியாக ஒன்றுசேர்த்து உரிய மந்த்ரம் கூறி பிரும்ம முடி என்ற முடிச்சைப் போட்டுத் தரித்துக்கொள்ள வேண்டும். தரிக்கும் முறையாவது: தலை, வலது கைக்கும் இடுப்பிற்கும் நடுவில் கீழ்பாகத்திலும், இடதுதோளில் மேல்புரமும் இருக்கும்படி தரிக்க வேண்டும். நாபிவரை இருத்தல் வேண்டும். யஜுர் வேதிகளுக்கும் ஸாம வேதிகளுக்கும் நாபிவரை (தொப்புள்மட்டும்) தொங்கும்படி இடது தோளின்மேல் தரித்தால் பலத்தைக் கொடுப்பதாகும்.

மிருத்திகா (கோபி) விபூதி சந்தனம் முதலியவைகளால் நெற்றிக்கு இட்டுக்கொள்ளவேண்டும். நெற்றியில் விபூதி சந்தனம் முதலியவைகள் மூன்று ரேகைகளாக தரித்துக்கொள்ள வேண்டும். ஊர்த்வ புண்ட்ரமாகவும் மேல் நோக்கியதாகவும் இட்டுக் கொள்ளலாம். மூன்று கோடாக இடது பக்கமிருந்து வலம் வரை இட்டுக்கொண்டால் அதனை த்ரிபுண்ட்ர மென்றும் மேல்புரமாக இட்டால் ஊர்த்வ புண்ட்ரம் என்றும் சொல்வர். அவரவர்களின் குலத்தின் ஸம்ப்ரதாயப்படியே நெற்றிக்கு இட்டுக் கொள்ள வேண்டும். ஊர்த்வபுண்ட்ரம் என்பது ஒரு விரல் நீள அளவாகும். த்ரிபுண்ட்ரமோ வெனில் மூன்று விரல்களால் மூன்று ரேகைகளைப் போல் இட்டுக் கொள்வது. அதில் பிரம்மா விஷ்ணு சிவன் என்பவர்கள் வாஸம் செய்கிறார்கள். அவர்களைப் பார்ப்பதால் பாபம் போகும். நெற்றிக்கு இட்டுக் கொள்பவரைப் பார்த்தால் கூட பாபம் நீங்கும். அவருடைய நெற்றியில் பிரம்ம விஷ்ணு சிவன் வாஸம் செய்கிறார்கள் அல்லவா ?

அந்தணர்களின் கரத்தில் ஸ்வர்க்கமும் வாக்கில் வேதங்களும் கையில் ஹரியும் சரீரத்தில் தீர்த்தங்களும் ப்ரீதியும் நாடிகளில் மூன்று குணங்களும் இருக்கின்றன. கழுத்தில் ஸாவித்ரியும் ஹ்ருதயத்தில் பிரம்மனும் இரு ஸ்தனங்களின் நடுவில் தர்மமும் பின்புறத்தில் (பிருஷ்டத்தில்) அதர்மமும் இருக்கின்றன. அந்தணர்கள் பூமி தேவர்களாவர். நான்கு ஆச்ரமங்களின் தர்மங்களை நடத்துபவர்கள். (பிரம்மசர்யம், க்ரஹஸ்தாச்ரமம், வானப்ரஸ்தாச்ரமம், ஸன்யாஸம் என்பவை நான்கு ஆஶ்ரமங்களாம்). அரசே! அவர்கள் விஷ்ணு தர்மங்களையும் செய்பவர்களாவார்கள். ஆகவே அவர்கள் நல்ல வார்த்தைகளால் பூஜிக்கத்தகுந்தவர்கள். நமஸ்காரம் செய்யத் தக்கவர்கள்.

பிராம்மணர் பாலகர்களாயினும் ஞானத்தால் பெரியவர்கள் ஆனவர். தபஸால் பூதேவர் பெரியவர்களானவர். ஆதலால் இவர்கள் எனக்கு ப்ரியமானவர்கள். அவர்களின் வார்த்தையைக் காப்பதற்காகவே நான் பல அவதாரங்கள் செய்கிறேன். பிராம்மணர்களின் வாக்கு எல்லா பாபங்களையும் போக்கும். ஸகல பயங்களையும் அகற்றுமென்று கல்கியின் வசனங்களைக் கேட்டு விஷ்ணுபக்த சீலரான அரசன் அவரை வணங்கி நிர்மலமான மனதுடன் சென்றான்.

விஶாகயூபன் சென்றதும் சிவனால் கொடுக்கப்பட்ட கிளி ஒரு நாள் இங்குமங்கும் திரிந்து மாலை வேளையில் கல்கிக்கு எதிர்வந்து வணங்கி ஸ்தோத்திரம் செய்தது. ஸ்தோத்திரம் செய்த கிளியைப் பார்த்து புன்னகையுடன் கல்கி சொன்னார்: ''கிளியே! உன் வரவு நல்வரவு ஆகுக! எங்கிருந்து வருகிறாய்? ஆஹாரம் செய்துவிட்டு வருகிறாயா? எனக் கேட்டார்.''

கிளி கூறிற்று: ''நாத! மிகவும் ஆனந்தத்துடன் கூடிய என்னுடைய வசனத்தைக் கேளும்! நான் கடலின் நடுவிலுள்ள சிம்ஹலம் எனப் பெயருள்ள த்வீபத்திற்குச் சென்றேன். அத்தீவில் நடந்தவைகளைச் சொல்லுகிறேன். அது காதுக்கினிமையாயிருக்கும், அத்தீவை 'ப்ருஹத்ரதன்' எனும் அரசன் ஆண்டுவருகிறான். அவன் கன்னிகையின் சரிதத்தைக் கூறுகிறேன். ப்ராஹ்மணர்கள் க்ஷத்ரியர்கள் வைச்யர்கள் நான்காம்வர்ணத்தவர்கள் முதலியவர்கள் சூழ்ந்திருக்கும் ஸிம்ஹலத்வீபத்தை ஆண்டுவருகிற

ப்ருஹத்ரதனுக்கு 'கௌமுதீ' எனும் பட்டமஹிஷி ஒருவள் உண்டு. அவளிடத்தில் ஓர் மகளைப் பெற்றெடுத்தான் வேந்தன். மாளிகை, கோபுரங்கள், வீடுகள், அகழிகள், ரத்னங்கள், ஸ்வர்ணங்கள் முதலிய செல்வங்கள் நிறைந்த ஊரது. உத்தம ஸ்திரீகள் நிறைந்த நாடு அது. அன்னப் பறவை விளையாடும் ஓடைகளும், நதிகளும் அனேக விதமான தாமரை, கல்ஹாரம், குந்தப்பூ முதலிவைகளால் அழகானதுமாயுள்ள ஸரஸ்ஸாலும் உத்யானத்தாலும் விளங்கும் ஸிம்ஹல த்வீபம் எனும் தீவை மஹா பல பராக்ரமசாலியான ப்ரஹத்ரதன் என்ற வேந்தன் ஆண்டுவருகிறான்.

அவனுக்குப் புகழ்பெற்றவளான பத்மா எனும் ஓர் கன்னிகை இருக்கிறாள். அவளுக்கு நிகராக அழகில் மூவ்வுலகிலுமிலர். அவளழகைக்கண்டு மன்மதனும் மோஹமடைவான். கௌரியைப் போல் ஸதா சிவனுக்கு ஸேவை செய்வதிலும் பூஜை செய்வதிலும் ஈடுபட்டிருக்கிறாள். தோழிகளோடும் கன்னிகைகளோடும் ஜபம், த்யானம் செய்வதிலூக்கமுள்ளவளாகவுமிருக்கிறாளென்றது கிளி."

ஒரு ஸமயம் மஹாதேவன் உமையோடு அவள் எதிரே ப்ரஸன்னரானார். அவளும் அவர்களைப் பார்த்து ஆநந்தமடைந்து பணிந்து துதித்து நின்றாள். பரமசிவன் அவளைப் பார்த்துச் சொன்னார்: "செல்வியே! உனக்கு நாராயணனே கணவராக ஆவார்! ஸந்தோஷத்துடன் அவர் உன்னை பாணிக்ரஹணம் செய்துகொள்வார்! மற்ற எந்த அரச குமாரரும் உனக்குத் தகுந்தவரல்லர் என்றார். உலகில் உன்னைக் காமக்கருத்துடன் எவர்கள் காண்கிறார்களோ அவர்கள் உடனே அந்த வயதுள்ள கன்னிகைகளாகவே ஆய்விடுவார்கள். தேவர்கள், அஸுரர்கள், நாகர்கள், கந்தர்வர்கள், சாரணர்கள் முதலிய எவராயினும் எந்த க்ஷணத்தில் உன்னை விரும்புவார்களோ அந்த க்ஷணத்திலேயே பெண்ணாக மாறிவிடுவார்கள் என்பது ஸத்யம். உன்னை நாராயணன் தவிர மற்றெவரும் பாணிக்ரஹணம் செய்துகொள்ளார்! ஆகவே போகங்களுக்கு இருப்பிடமான வீட்டிற்குச் செல்! தபஸ் போதும் நிறுத்து! ஓ லக்ஷ்மியே! நீ கவலைகொள்ளாதே" என்று பரமசிவன் பார்வதியுடன் பத்மாவுக்கு நல்வரம் தந்து அந்தர்த்தானமானார். ஹரனுடைய வரத்தைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்து பரமனை வணங்கித் தனது தந்தையின் இல்லத்திற்குச் சென்றாள் பத்மா.

## ஐந்தாம் அத்யாயம்.

ஶுகர் கூறினார் : பலநாட் சென்றபின் ப்ருஹத்ரதன் தனது மகளான பத்மா யௌவந ப்ராயமடைந்ததைக் கண்டார். இனி இவளுக்கு விவாஹம் செய்விக்காமலிருந்தால் மஹாபாபம் என்று எண்ணி, கௌமுதி எனும் தர்மபத்நியை அழைத்து ஏகாந்தத்தில் யோசனை செய்தார். காந்தே! நமது புத்ரியின் குலம் குணம் அழகு இவைகளுக்கு ஏற்ற வரனைத் தேடி மணம் செய்விக்க வேண்டாமா? எந்த ராஜகுமாரன் இவளுக் கேற்றவன்? தெரிந்தால் கூறென்றார். நாத! நமது பத்மா பரமசிவனை நாடி தவம் செய்து வரம் பெற்றதை மறந்தீரா? அவளை விஷ்ணுவல்லவோ மணக்கப் போகிறாராம்! காந்தே! நீ கூறுவது ஸத்யம்! அவள் வரம் பெற்றதும் நினைவிற்கு வந்தது! பகவான் நமக்கு மருமகனாக வந்தால் அதைவிட வேறு பாக்யம் உண்டோ? ஆனால் நாம் க்ஷத்ரியருக்கு ஸ்வதர்மமான ஸ்வயம்வரம் ஏற்பாடு செய்ய வேண்டாமா?

பாற்கடலி லிருந்து தோன்றிய மஹா லக்ஷ்மியை மஹா விஷ்ணு மணந்ததுபோல் நம் மகளை அவர் வந்து ஏற்கட்டும் என்று கூறி, ஸகல தேச ராஜகுமாரர்களையும் அழகிற் சிறந்த பத்மாவின் ஸ்வயம்வரத்திற்கு வரும்படி தூதர்களை அனுப்பினார். தன்னுடைய தேசத்திற்கு வரும் மன்னர்களை அவரவர்க்கு ஏற்றபடி பூஜிக்கத்தக்க ஏற்பாடுகளைச் செய்யும்படி உத்தரவிட்டார் மன்னர். எங்கும் ஒரே அலங்காரமாக இருந்தது. ஸிம்மள தேசம் அழகிய ஆடை ஆபரணங்களைப் பூண்ட மாதுபோல் விளங்கியது. அரச குமாரர்கள் நால்வகைச் சேனைகளுடன் அஷ்டாதச வாத்யங்கள் முழங்க வந்திகள் வாழ்த்த அனைவரும் வந்து சேர்ந்தார்கள். ஒவ்வொருவரும் அஸ்த்ர ஶஸ்த்ர மேந்தி வெண்குடையின் கீழ் இருபுறமும் சாமரம் வீச இளம் சூர்யனைப்போல் விளங்கினர்.

ருசிராஶ்வன் ஸுகர்மா மதிராக்ஷன் த்ருடாஶுகன் க்ருஷ்ணஸாரன் பாதரன் ஜீமூதன் க்ரூரமர்தநன் காஶன் குஶாம்பு வஸுமான் கங்கன் க்ரதநன் ஸஞ்ஜயன் குருமித்ரன் ப்ரமாதீ விஜ்ரும்பன் ஸ்ருஞ்ஜயன் அக்ஷமன் ஆகிய அரசகுமாரர்களும் மற்றோரும் வந்தனர். மஹாபலிஷ்டர்களான அனைவரும் ஸ்வயம்வர மண்டபத்தில் நுழைந்தார்கள். விசித்ரமான ஆடை ஆபரணம் சந்தநம் மாலை

முதலிய அலங்காரங்களைச் செய்துகொண்டு உல்லாஸமான நடையுடன் வந்து அவரவர் ஆஸநத்திலமர்ந்தனர். வாத்ய கோஷமும் நடநமும் எல்லோரையும் பரவசமாகச் செய்தது.

அரசன் அதி ரூபலாவண்யம் வாய்ந்த பத்மாவை ஸபைக்கு அழைத்து வந்தார். மூன்று லோகத்திலும் இவளுக்கு ஈடானவள் இல்லை. ரதியோ! மஹா லக்ஷ்மியோ! மோஹிநியோ! மாயையோ! என எண்ணத் தக்கவளாக இருந்தாள். வீரர்படை சூழ தோழிப்பெண்களுடன் பத்மா ஹம்ஸம்போல் மெல்ல மெல்ல நடந்து வந்தாள். வந்திகள் துதிபாட பத்மாவின் பாதஸரத்தின் சப்தமே காதுக்கினிமையாக இருந்தது. குண்டலம் அசைய கடாக்ஷ வீக்ஷணத்தால் எல்லோருக்கும் அருள்புரிந்து கொண்டு மந்தஹாஸத்துடன் கையில் ஸ்வயம்வரத்திற்கான ரத்நமாலையை ஏந்தி சிவந்த வஸ்த்ர மணிந்து இனிய குரலுடன் தன் அழகினால் முவ்வுலகத்தையும் விலைக்கு வாங்குபவள்போல் மெல்லமெல்ல வந்தாள். தேவியின் திவ்ய திருமேனியைக்கண்டு சிலர் மோஹமடைந்தனர்! சிலர் ஆஸநத்திலிருந்து மயங்கி விழுந்தனர்! பலர் தன்னை மறந்தனர்! சிலர் பரவசமடைந்தனர்.

தேவியின் அழகைக்கண்டு தனக்கு இவள் மாலையிடுவளா? மனைவியாவளா? என எண்ணியவர் உடனே ஸ்த்ரீகளாக மாறிவிட்டார்கள்! சிவன் முன்னர் அங்ஙனம் வரம் தந்தாரல்லவா? பெண்களாகியும் பத்மாவினிடம் உள்ள அழகைக் கண்டு பரவசமாகி அவளைப் பின் தொடர்ந்தனர்! இதைக்கண்டு எல்லோரும் ஆஶ்சர்யம் அடைந்தனர்! தேவி திகைத்து வீடுவந்து தோழியை நோக்கிக் கூறினாள்: "ஸகி! எனது துரதிருஷ்டத்தைப் பார்! பரமசிவன் தந்தவரமும் வீணாயிற்றோ? பகவானும் வரவில்லை! ராஜகுமாரர்களும் என்னைக் கண்டவுடன் பெண்ணானார்களே! இது என்ன விந்தை? நான் செய்த பாபமா இது" என வருந்தி, ஆபரணங்களைக் களைந்து, விவாஹ வேஷத்தைக் கலைத்து, சிவன் சொற்படி பகவான் தன்னை ஏற்கவேண்டுமென மநதினால் த்யாநம் செய்து பிரார்த்தித்துவந்தாள்.

## ஆறும் அத்யாயம்.

ஸகியைப் பார்த்து பத்மா கூறினாள்: "ஹே ஸகி! என் தலையில் பிரும்மா என்ன எழுதினாரோ? நான்

பார்த்த புருஷரெல்லாம் பெண்ணுனர்களே ! நான் மஹா பாபியோ ? நான் செய்த ஶிவபூஜை எல்லாம் வீணோ ? மஹாவிஷ்ணு, லக்ஷ்மீபதியான வைகுண்டநாதன் என்னை ஏற்பாரா ? மதிப்பாரா ? என்னை விரும்புவாரா ? சிவன் சொல்லும் வீணுகி விஷ்ணுவும் என்னை ஏற்காவிடில் பகவானையே நினைத்துக்கொண்டு தீயில் விழுவேன் ! ஏழையான மநுஷ்ய ஸ்த்ரீ எங்கே ? வைகுண்டநாதன் எங்கே ? என்னைத் தெய்வம் வஞ்சித்துவிட்டது ! விஷ்ணுவினுல் கைவிடப்பட்டு, இங்ஙனம் ஏமார்ந்த எந்த ஸ்த்ரீதான் பிழைத்திருப்பாள்? எனப் பலவகையாகப் புலம்பினுள்.'' சிவனுல் கல்கிக்குக் கொடுக்கப்பட்ட வேதமயமான கிளி இவைகளை யெல்லாம் கேட்டிருந்தது. ஶம்பள நகரம் வந்து பகவான் கல்கியிடம், ஸ்வாமின் ! ''நான் ஸிம்மளத்தில் ஒரு ஆலமரத்திலிருந்து (மேற்கண்ட சம்பாஷணைகளை) இவைகளைக் கவனித்துக் கேட்டேன்! என்று பத்மாவின் துயரத்தையும் ஏமாற்றத்தையும் வர்ணித்தது''

இதைக் கேட்டு பகவான் கல்கி, '' ஓ கிளியே ! நீயே எனக்குத் தூதாக இரு ! பத்மாவிடம் செல் ! நான் ஶம்பள நகரத்தில் இருக்கிறேன் என்றும், ரொம்பவும் பெருமை வாய்ந்தவன் என்றும், உன்னையே மணக்க விரும்புகிறேன் என்றும் கூறு. நீ எல்லா மறிந்தவன், எல்லா ஶக்தியும் வாய்ந்தவன். காலத்தை அறிந்தவன். பத்மாவிடம் சென்று, உனக்காக பகவான் கல்கி அவதரித்திருக்கிருர் ! என்றும் கூறி, அவளது துக்கத்தை அகற்றி, என்னிடம்வந்து அவள் கூறிய சொற்களைக்கூறு என்ருர்.'' இதைக் கேட்டு பரம ஸந்தோஷமடைந்த கிளி பகவானை வணங்கி ஸிம்மளத்தை நாடிக் கிளம்பிற்று.

கிளி மாதலம்பழ முத்துக்களைப்புஜித்து நீர் அருந்தி கடலில் மூழ்கி அரசனது அரண்மனைக்குச் சென்றது. கன்யகைகள் உள்ள இடம் சென்று ஒரு மரத்தின்மீது அமர்ந்து மநுஷ்ய வாக்கைப் பின்பற்றி பத்மாவைப் பார்த்துக் கூறியது. ''ஓ கல்யாணி ! நீ ஸுகமா ? உனது அழகையும், இளமையையும் சஞ்சலமான கண்களையும் பார்த்தால் லக்ஷ்மீபோல் தோன்றுகிறது ! தாமரை போன்ற முகம், தாமரை இதழ் போன்ற கண், கரத்திலும் கமலத்தை வைத்திருக்கும் உன்னை மற்ருெரு மஹாலக்ஷ்மி என்றேநினைக்கிறேன்! ஜீவராசிகளை மயக்க ஸகல

அழகுகளையும் ஒன்றாகச் சேர்த்து உன்னைப் படைத்தாரா பிரும்மா'' என்றது. இந்த அமிருத மொழியைக் கூறும் கிளியை நோக்கி, நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? ஏன் கிளி வடிவம் தாங்கி இருக்கிறாய்? தேவனா? தானவனா? தயாபரனான மனிதனா? என்று வினவினாள்.

நான் ஸர்வக்ஞன். இஷ்டமான இடம் செல்பவன். ஸகல ஶாஸ்த்ரகளையும் அறிந்தவன். தேவ ஸபையிலும் கந்தர்வ சபையிலும் ராஜ சபைகளிலும் எல்லோராலும் பூஜிக்கப்பட்டவன். நீ ஏதோ மநதில் ஒன்றை எண்ணிக் கவலைப் படுகிறாய். ஸகல போகங்களையும் விட்டு தாபப் படுகிறாய். ஸங்கீதம் நாட்யம் ஹாஸ்யம் ஆபரணம் லீலை முதலியவைகளை விட்டு வருந்துகின்றாய். மதுரமான உனது குறல் மிக தீநமாக இருக்கிறது. உனது கோகிலம் போன்ற த்வனியை கேட்பவரே பாக்யமுள்ளவர். ஶிரீஷ புஷ்பம் போன்ற உடல்! சந்த்ரன் போன்ற காந்தி! தபஸ் தாநம் ஜபம் முதலிய புண்யம்செய்தவரே உன்னைப் பெற முடியும். உன்னைத் தர்ஶித்தவர்களுக்கு மறுபிறப்பு கிடையாது. பிருஹத்ரதன் குமாரியே! உனது மனக்கவலையைச் சொல் என்றது ஶுகம்.

குலமிருந்தென்ன? குணமிருந்தென்ன? அழகிருந்தென்ன? தெய்வானுக்ரஹம் இல்லாவிடில் இவ்வளவும் வீணே! ஓ ஶுகமே! நீயும் அறிந்திருக்கலாம். யான் இளமை தொட்டு ஶிவசேவையில் ஈடுபட்டேன். அதனால் ஸந்தோஷமடைந்த பரமஶிவன் எனது அபிப்ராயத்தை உணர்ந்து மஹாவிஷ்ணுவே உன்னை மணப்பார்! தேவரோ மற்றெவரோ உன்னைக் காமனையுடன் பார்த்தால் உடனே அவர் பெண்ணாவார்! என வரமளித்தார். எனது யௌவந வயதைக்கண்டு எனது தந்தை ஸ்வயம்வர ஏற்பாடு செய்தார். அழகிலும் செல்வத்திலும் குலத்திலும் குணத்திலும் சிறந்தபற்பல ராஜகுமாரர்கள் ஸபைக்குவந்தனர். என்னைக் காமனையுடன்பார்த்து ஶிவ வரத்தால் அனைவரும் பெண்ணாகி என் தோழிகளாகி என்னுடன் வஸிக்கின்றனர்! என்னுடன் சேர்ந்து சிவன் கூறியபடி தவத்தாலும் தியாநத்தாலும், பகவானை ஆராதிக்கின்றனர். இதுவரை பகவான் வரவில்லை. என்னை மணப்பரா? என தெரியவில்லை! இதே எனது ஏக்கத்திற்குக்காரணம், என்றாள் பத்மா.

## ஏழாம் அத்யாயம்.

பரமசிவன் விஷ்ணுவை எப்படி ஆராதிக்கச் சொன்னார். சிவானுக்ரஹத்திற்கு பாத்ரமான நீ மிகக்கொண்டாடத்தக்கவள். உன்னுடன் பேசும் பாக்யம் பெற்ற நானும் தன்யன் ஆனேன். பக்தியோகம் ஜபம் த்யாநம் முதலியவைகளைப் பரமசிவன் கூறியவண்ணம் எனக்குச் சொல். அதனால் எனக்குக் கிளிபிறவி அகலும்! என்றது கிளி. சிவன் அருளிய விஷ்ணு பூஜாகிரமத்தைக் கேட்டாலே குருஹத்தி பிராம்மணஹத்தி முதலிய பாபங்கள் அகலும். ஶ்ரத்தையுடன் கேள். "காலையில் ஸ்நாநம் செய்து கைகால்களைச் சுத்தம் செய்து ஆஸநத்தில் அமர வேண்டும். கிழக்கு முகமாக இருந்து மநதை அடக்கி அங்கந்யாஸ கரன்யாஸத்துடன் ஸங்கல்பம் பூதசுத்தி அர்க்யஸ்தாபநம் செய்யவேண்டும். ந்யாஸம் உடலை அந்தந்த தேவ மயமாகச் செய்கிறது.

பாத்யம் அர்க்யம் ஆசமநீயம் ஸ்நாநம் வஸ்த்ரம் ஆபரணம் முதலிய உபசாரங்களைக் குரு கூறியபடி மூல மந்த்ரத்தினுல் செய்ய வேண்டும். ஹ்ருதயத்தில் பாதாதி கேஶம் வரை பகவானை த்யானம் செய்ய வேண்டும். பகவான் ப்ரஸன்ன முகமுள்ளவன். பக்தர்களது இஷ்டத்தைப் பூர்த்திசெய்பவர்! என எண்ணவேண்டும். ஓம் நமோ நாராயணாய ஸ்வாஹா என்று கூறி ஸித்தர்களால் யோகவழியில் பூஜிக்கப்படுபவரும் லக்ஷ்மிக்கு ஆலயமும், துளஸி மாலை என்ற வ்யாஜமாக பக்தர்களால் சூழப்பட்டவரும், அழகிய நகமெனும் இலைகளை உடையதான விஷ்ணுவின் பாதாரவிந்தத்தை ஆஶ்ரயிக்கிறேன். காலில் நூபுரம், இடையில் பதாகை போன்ற பீதாம்பரம், அழகிய முழங்கால், முக்தாஹாரத்தால் ப்ரகாசிக்கும் மார்பு, இடுப்புவரை நீண்ட கரங்கள், வலயம் தரித்த கரம். கேயூரமணிந்த புஜம், தாமரை போன்ற கண்கள், சிவந்த உதடு, புன்னகையுடன் கூடியவர். சிறந்த புருவம், விசாலமான நெற்றி, விலாஸம் நிறைந்த முகம் இவைகளை ஸ்மரிக்கிறேன். இங்ஙனம் ஒவ்வொரு அவயவங்களையும் த்யானிக்கவேண்டும். ஶோகம் மோஹம் லோபம் பாபம் முதலியவை நிறைந்த தீனனை என்னை ரக்ஷி வாஸுதேவ! என ப்ரார்த்திக்க வேண்டும். இங்ஙனம் பக்தியுடன் பரமனை த்யானம் செய்வோர் ஶுத்தர்களாகி முக்தியையும் பெறுவர். இதைப் படிப்பவர்களோ ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு இஹபர ஸுகத்தைப் பெறுவர்."

## த்விதீயாம்சம் — முதல் அத்யாயம்.

இங்ஙனம் பத்மா கூறியதைக் கேட்டு பேரானந்தம் அடைந்த கல்கி தூதரான ஶுகம், ஸாங்கமாக அவரது பூஜையைக் கூறு. அதையும் கேட்டு அதன்படி அநுஷ்டித்து மூவ்வுலகிலும் சஞ்சரிப்பேன் என்றது. பத்மா கூறினள்: "முதலில் ஜகதீஶனைப் பாதாதிகேஶ பர்யந்தம் த்யானம் செய்து பிறகு குரு உபதேசித்தபடி மூல மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். பிறகு தண்டம்போல் விழுந்து ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து விஷ்ணுவுக்கு நிவேதனம் செய்ததை விஷ்வக்ஸேனர் முதலியவர்களுக்கு அளித்து பிம்பத்திலிருந்து விஷ்ணுவை உத்வாஸனம்செய்து மநதில் அமர்த்தி நர்த்தனம், கானம், கீர்த்தனம் முதலியன செய்ய வேண்டும். விஷ்ணு எங்கும் வ்யாபித்திருப்பதாகக் கருத வேண்டும். நிர்மால்யத்தைச் சிரஸில் வைத்துக் கொண்டு நிவேதனத்தை பக்தர்களுக்கு அளித்து புஜிக்கவேண்டும். இப்படி ஒருபலனைநாடி பூஜைசெய்தால் அந்த இஷ்டத்தை உடனேபெறுவர். ஒருவித ஆசையுமின்றி பூஜித்தால் மறு பிறப்பில்லா பேரானந்தத்தை அடைவர்". கிளி கூறிற்று: "பக்தர்களது மனதிற்கு இன்பமூட்டுமிதைக் கேட்டேன். பாபம் அகன்று நற்கதிபெறுவேன் என்பது ஸத்யம். இது இருக்கட்டும்! ஜீவனுள்ள ஸ்வர்ண பிம்பம்போலிருக்கும் உனக்கேற்ற பதி மூவ்வுலகிலும் காணவில்லை. ஆனல் கடலின் அக்கரையில் பரம ஆஶ்சர்ய ரூபம் உள்ள ஒரு புருஷன் இருக்கிறுன். அவன் ஸாக்ஷாத் ஈஶ்வரனெனத் தகும். மனித ஶக்திக்கு மேலான ஶக்தியுள்ளவர். ப்ரும்ம ஸ்ருஷ்டியில் சேர்ந்தவரல்ல அவர். வாஸுதேவனே அவர் எனத் தகும். நீ த்யானம் செய்கிற மூர்த்தியே அவர்". என்று கிளி கூறியதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த பத்மா கூறினள்: "ஓ கிளியே! அவர் யார்? எங்கே இருக்கிறுர்? அவரைப்பற்றி நீ அறிந்ததையெல்லாம் விரிவாகக் கூறு. நீ மரத்திலிருந்து கீழே இறங்கிவா. இவ்வளவு விஷயம் அறிந்து நற்செய்தி கூறும் உன்னை விதிப்படி பூஜிக்கிறேன். ருசியான மாதலம்பழ முத்துகளைத் தருகிறேன். காய்ச்சிய பால் அளிக்கிறேன். சிவந்த உனது மூக்குக்கு ரத்ந கவசமும் கழுத்திற்கும் இறக்கைகளுக்கும் சிறந்த ஆபரணமும் அளிக்கிறேன். இயற்கையிலேயே அழகான உன்னை சிறந்த ஆடை ஆபரணங்களாலும், பரிமளமிகுந்த அங்கராகங்களாலும் அழகாகச்செய்கிறேன். இவ்வுத்தம விஷயத்தைக்கூறிய உனக்கு எதைத்தான் தரலாகாது".

